உ

*" Give me not, O God, that blind, fool faith in my friend, that sees no evil where evil is, but give me, O God, that sublime belief, that seeing evil I yet have faith."*

*"Seek Truth wherever you can find it," But, " Make your choice and stick to it till you reach the End."*

ஸத்யம்வத.—**Speak the Truth**.

"Hitch Your Wagon to a Star. " To Thine Own Self be True.




அன்பேயவன் : அறிவேசக்தி : ஓம்தத்ஸத்.] உ [God is Love : Knowledge is Power: *Om*.

ஸத்யமேஜெயம்—**Satyameva Jayati**.

புத்தகம். 16] 1907-ம்ஹு ஆகஸ்ட்மீ. [சஞ்சிகை 4.

An Appeal to Our Subscribers.—

The Viveka Chintamani Publishing Committee repuest all subscribers to remit their subscriptions to the Viveka Chintamani without delay and to kindly help them increase their subscription list by new addittions to it from among their friends and acquaintances.

நமது சந்தாதாரர்களான நேசர்கள் அவரவர்கள் சந்தாத்தொகையை யனுப்புவதோடு புது சந்தாதாரர்களை யும்சேர்த்தனுப்பி யுதவவேண்டுமாய் விவேகசிந்தாமணி கமிட்டியார் அவர்களை விநயமாய்க் கேட்டுக்கொள் கிறார்கள்.

# "Children of the Motherland."

## " ஸ்ரீபாரத மாதாவின் பிரபன்ன மக்கள்."

இத்தலைப்பெயர் புனைந்த புஸ்தகமொன்று ஸ்ரீகாசியில் ஸ்தாபிக்கப்பட்டிருக்கும் ஸெண்ட்ரல் ஹிந்துகாலேஜின் காரியவிசாரணை சபையாரால் இங்கிலீஷில் பிரசுரிக்கப்பட்டிருக்கிறது. அதை யெழுதினவர்கள் ஸ்ரீபகவன்தாஸ், அவருடைய புத்திரர் ஸ்ரீபிரகாசர், ராய்பஹதூர் சியாமசுந்தரலால், ஸ்ரீயோகேந்திரஸிங், ஸ்ரீதனத்தர்ஸிங், மிஸ்டர் ஜெ. எம். டேவீஸ், மிஸ்ஸஸ் அன்னிபெஸண்ட், யஸ்வந்த வி. பிரதான். இப்புஸ்தகம் ஸ்ரீபாரதமாதா

வின் பிரபன்னமக்கள் சிலருடைய சரித்திரத்தைக் கூறுவதாகவிருக்கிறது. பள்ளியிற்படிக்கும் பிள்ளைகள் பெண்களின் உபயோகத்துக்காகவென்று ஹிந்துதேச சரித்திரத்தினின்றும், புராண இதிஹாஸங்களினின்று மிருந்தெடுத்தெழுதப்பட்டது. சாதாரணமாக இங்கிலீஷ் படிக்கவாரம்பித்தபின், பள்ளிப்பிள்ளைகள் தங்கள் ஸ்வதேசமகிமையைப்பற்றி யதிகமாகக் கேள்விப்படுகிறதில்லை. எல்லாம் வெள்ளைக்காரர்கள் மகிமையையே பற்றிச்சொல்வதாயிருக்கிறது. அன்றி ஸ்வதேச லக்ஷியத்துக்குக் குறைவான பல பொய்புரட்டுகளையும் சொல்லக் கேட்கிறார்கள். பிள்ளை இங்கிலீஷ் படித்து தாஸில் செய்யப்போகிற பெருமையில், முதற்றலைமுறையில் பிள்ளைகளை இங்கிலீஷ்படிக்கவைத்தவர்கள் இக்குறைகளை கவனிக்கவில்லை. இரண்டாந்தலைமுறையில்இங்கிலீஷ்படித்த பிள்ளைகள் தங்கள் பெற்றோர்களையும் சுதேசலக்ஷியத்தையும் இகழ்ந்து, தாங்கள் படித்த இங்கிலீஷ்படிப்பின் பெருமையில் ஸ்வதேசத்தையும் ஸ்வதேசிகளையு மிகழ்ந்து தாங்கள் துரைமார்களாகப்போய்விட்டதாக பாவனைகாட்டிவந்தார்கள். இப்பொழுது மூன்றாவது தலைமுறையில் இங்கிலீஷ்படிக்கிற பிள்ளைகள் தங்கள் ஸ்வதேச மகிமையைப்பற்றிக் கேட்க ஆசைப்பட்டாலும் சொல்வாரின்றித் தவிக்கிறார்கள். இந்தஸ்திதியிலிருக்கும்பொழுது ஸ்வதேசியலக்ஷியம் வரவர அதிகமாகப்பரவ, ஸ்வதேச மஹிமையை விளக்கும் சரித்திரபாகங்களை யதிகமாக வாசிக்கவேண்டுமென்று வங்காளத்து ஸ்வதேசவித்தியாசங்கத்தார் அதற்கு வேண்டிய பாகங்களை யெடுத்துப்பிரசுரித்தார்கள். ஸெண்ட்ரல் ஹிந்து காலேஜ் விசாரணைகர்த்தர்கள் அவர்களுக்கும் முந்தியே, இந்தியாவின் பெருமையை விளக்கும் சரித்திரங்களை யெடுத்துப் பிரசுரித்திருப்பதைப்பார்க்க மிகவும் சந்தோஷமாகவிருக்கிறது. இந்தப்புஸ்தகத்தில் இராஜபுத்திரர்கள், மகம்மதியர்கள், சிக்ஜாதியார்முதலான எல்லாவருணத்திலும் மஹாவீரர்களாயிருந்தவர்களுடைய சரித்திரங்களும், ஸ்ரீபுமான்களிருவரிலும், யுத்தத்திலும், இராஜாங்கதோரணையிலும், மதவிஷபத்திலும்,மஹாத்மாக்களாகவிருந்தவர்கள் சரித்திரங்களுமாக ஒருவாறு சேர்த்துப் பிரசுரித்திருக்கிறார்கள். "பலத்தில் பீமனை யொத்தவன்" என்று எல்லாரும் சாமான்யமாகச் சொல்லுகிறார்கள். ஆனால் பீமனுடைய பலத்தையும் வீரச்செய்கைகளையும் சிறுவர்களுக்குச் சொல்வார் யார்? முன்காலத்தில் ஊர்கள்தோறும்,இராமாயணம் வாசிப்பதும், பாரதக்கதை கேட்பதும் வழக்கமாயிருந்தது. விட்டிலுள்ள பாட்டிகளுக்கு இராமாயணக்கதைகளும், மஹாபாரதக்கதைகளும் சிரவணமாத்திரத்தால் நன்றாகத்தெரியும். சீதை, த்ரௌபதி,தமயந்தி, சந்திரமதி, மைத்ரேயிமுதலிய பாதுசிரோமணிகளின்சரித்திரங்கள் பாட்டுகள்ரூபமாகத்தெரியும். ஸ்ரீமதி ஆர். எஸ். சுப்பலக்ஷிமியம்மாள் அவருடைய கொள்ளுப்பாட்டியார் சொல்லிவந்த பாட்டுகளில் அனேகத்தை யொன்றுசேர்த்துப்பிரசுரத்திருக்கிறாள். அவற்றிற் பெரும்பான்மையும் விவேகசிந்தாமணியில் வெளியாய் வந்தன. அக்கதைகளின் தத்துவங்கள் எவ்வளவோ மேலானவையாகவிருக்கின்றன. அவற்றில் ஒருசிறிதையே நாம் இக்காலத்துக்கேற்றபடி விவரித்தெழுதினோம். முற்காலத்தில் நிரக்ஷரகுக்ஷிகள் என்று பேரெடுத்திருந்த பெரிய கிழவிகள் வாய்ப்பாட்டின் அருத்தம் இக்காலத்தில் பி. ஏ. முதலான பட்டங்கள் பெற்று சாஸ்திரவிற்பன்னர் என்கிற பேரும் பெற்று ஆயிரக்கணக்காய்ச்சம்பளம் வாங்கும் அவர்களுடைய பேரப்பிள்ளைகளுக்கு ரஸிக்கிறதில்லை. ஏனென்றால் "புத்தியில் ஏறவில்லை"யென்கிறார்கள். இந்த வில்லங்கமெல்லாம் ஸ்வதேசீய, ஸ்வஜாதீய வித்தையை பால்யத்திலே கைவிட்டு அந்நியப்படிப்பே படித்து வந்ததினால் வந்தபலன். அதனாலேயே ஸ்வதேசாபிமானமும் குறைந்துபோய்

விட்டது. பூர்வசரித்திரத்தை நன்றாக அறிந்திருப்பதோடு, நமது தற்கால நிலைமையையும் உள்ளபடி யறிந்திருக்கவேண்டியது அவசியம். தற்கால நிலைமையையுணர இக்காலத்தில் படிப்பும், பூர்வீகத்தின் பெருமையையுணர நமது முன்னோர்களில் மேலோர்களானவர்கள் சரித்திரத்தையும் நாம் நன்றாக அறிந்திருக்கவேண்டும். நமது இராஜபுத்திர் வம்சத்தில் எத்தனையோ மஹாவீரர்களிருந்திருக்கிறார்கள். அப்படியே பெண்பாலிலும் அவர்கள் பால் வீரத்தன்மையுள்ளவர்களிருந்திருக்கிறார்கள். இவர்கள் சரித்திரமென்ன, குருநானக், ஆக்பர், சிவாஜிமுதலான மஹாவீரர்கள், மஹாத்மாக்களென்ன, ஸாவித்திரி, சாகுந்தலை, தமயந்தி, இந்துமதி, சித்தூர்நாட்டுப் பத்மாவதி, மீராபாய், தாராபாய், ரூபாவதி, சந்த்பிபி, அஹல்யாபாய், போன்ற பெண் இரத்னங்கள் என்ன, இவர்களுடைய சரித்திரங்களை நமது சிறுவர்கள் சிறுமிகள் இளவயதில் அறிந்துகொள்வதனால் தாங்களும் அவர்களைப்போல் பெருந்தன்மையுடையவர்களாக நடந்துகொள்ளவேண்டு மென்பதற்கு நல்ல தூண்டுதலுண்டாம். ஆகையால் இச்சரித்திரங்களை யொன்றுசேர்த்து பாரதமாதாவின் மக்கள்கள் சரித்திரமென்று வெளியிட்டிருப்பது மிகவும் நல்லதேயாம். இப்படி ஆடம்பரமின்றி நமது சிறுவர்கள் சத்குணசம்பந்நர்களாகவேண்டிய வழியைத் தேடியுழைத்தால் அவர்கள் சீக்கிரத்தில் எவ்விதப் பொறுப்பையும் வகிக்கயோக்கியதையுள்ளவர்களாவார்கள். யோக்கியதையுள்ளவிடத்தில் கௌரவம் தானேவரும். வராவிட்டால் வரும்படிசெய்யும் சக்தி தானேயுண்டாகும். அதைவிட்டு வீணாடம்பரங்கள்செய்து பூனை தானும் புலியாகவேண்டுமென்று மேலெல்லாம் சூடிட்டுக்கொண்டதுபோல, வன்கண்டர்களை யெதிர்க்கவேண்டி வல்லடி வழக்குச்செய்தால், அவர்கள் நாணயமாகவோ, சரி-தப்பாகவோ, தர்மாதர்மம் பாராமல் தங்கள் காரியத்தைச் சாதித்துக் கொண்டுபோய்விடுகிறார்கள். நாம் ஏமாந்து போய், இளிச்சவாய்ப்பட்டம் பெறுவது ஒன்றுதான் மிச்சமாகிறது. அப்படி இளிச்சவாய்ப்பட்டம் பெற்ற பிறகாவது நாம் இளிச்சவாயனானோம், இனி கண்ணைத்திறந்துகொண்டு கெட்டிக்காரனாகத் தேறல்வேண்டுமென்று தோன்றினால் அந்தமட்டும் நல்லதுதான். இப்பொழுது நாமிருக்கும் நிலையிதுவே. இந்த நல்ல எண்ணம் வெறும் எண்ணமாகப்போகாமல், சாதன சாத்தியங்களையறிந்து சாதகவழி தேடி, பிடித்தகாரியத்தைச் சாதித்துக்கொள்ளவேண்டியது நம்கடமையாம், இதற்குச்சிலரேனும் தத்துவதரிசிகளாயிருந்து தத்துவங்களை நன்றாகக்கைப்பற்றிப் போகும்வழி காட்டல்வேண்டும். மற்றவர்கள் உண்மையாக உள்ளபடி கிரகித்துக்கொண்டு உளவறிந்து உழைக்கவேண்டும். உழைத்தால், உழைப்பு வீண்போகாது.

"தெய்வத்தானாகாதெனினுமுயற்சிதான், மெய் வருத்தக் கூலிதரும்,"—என்றபடி ஊக்கத்தைக் கைவிடாமல் "முயற்சிகடைப்பிடி" யென்னும் வாக்கியத்தை யனுசரித்து கடைவரையில் அதாவது காரியசித்தியாகிற வரையில் பிடித்தபிடிவிடாமல் ஊக்கமேற்கொண்டுழைத்தால், தெய்வசகாயமில்லாமற்போனாலுங்கூட முயற்சி வீண்போகாது. ஆனால், இப்பொழுது இருக்கும் ஸ்திதியைப்பார்த்தால் இந்தியாவிற்கு நல்ல காலம் பிறக்கும்வேளை வந்திருக்கிறதென்று தோன்றுகிறது. முன்னுக்கு வருத்தமாயிருப்பது பின்னுக்குச்சுகமாய் முடியும். ஆகையால் வருத்தத்துக்கு பயந்து பின்வாங்காமல், தைரியத்தைக் கைவிடாமல் நாமுழைக்கவேண்டும். இதுவே இப்பொழுது நாம் அறியவேண்டிய முதல் நீதி.

# THE IMPOSSIBILITY OF GAGGING A NATION'S MOUTH.

## "உலைவாயைமூடினாலும் ஊர்வாயை மூடலாமா?"

"உலைவாயை மூடினாலும் ஊர்வாயை மூடலாமா?" என்பது ஒரு பழமொழி. அதன் கருத்து என்னவென்றால் ஜடப்பிரகிருதியை யடக்கியாண்டாலும், ஜீவப்பிரகிருதியை யடக்கியாள முடியாது என்பதாம். அடுப்பில் உலைநீர் வைத்தால், அது சூடு ஏறினதும் 'தளபிள' வென்று சத்தம் செய்துகொண்டு கொதிக்கும். அந்த சமயம் அதை ஒரு பாத்திரத்தால் மூடிவைக்கலாம். மூடிவைத்தால் சில காலம் கழிந்ததும் நீர் கொதிப்படங்கி ஆவியாக மாறும். அந்த ஆவி போகிறதற்கு சிறு வழிகளிருந்தால் அந்த மூடி அப்படியே யிருக்கலாம். இது கஷ்ட சாத்தியமானாலும், ஒரு விதத்தில் சாத்தியமாம். ஆனால் ஊர் ஜனங்கள் வாயை மூடமுடியுமா? 'ஊர்' என்றது இங்கு உலகுக்கெல்லாம் பொருந்தும் பெயராம். "ஊர்வாய்" ஒன்று, இரண்டா? விராட்ரூபியான ஈசுவரனுக்கு எங்கும் வாய், எல்லாம் வாயாக விருக்கையில் இந்த வாயைமூட 'உலைமூடி' எங்கே யகப்படும்? இது சாத்தியமல்லவென்பது கருத்து. இந்தியா கவர்ன்மெண்டார், இத்தேசத்தில் அம்மையார்களெல்லாமறிந்துள்ள இந்த உண்மையின் தத்துவத்தை யுணரமாட்டாமலோ, உணர்ந்தும் உணராதார்போல் நடித்தோ, "ஊர்வாயைமூட" ஒரு சட்டம் செய்ய உத்தேசித்து அவசர அவசரமாக ஏற்பாடுசெய்து வருகிறார்கள். சென்ற மேமீ 10உ பொதுக்கூட்டங்கள் சம்பந்தமான "ஆர்டினன்ஸ்" என்னும் ஸ்பெஷல் சட்டமொன்று செய்தார்கள். அதனால் கவர்னர்-ஜெனரல் அவர்கள், பஞ்சாப், பெங்காள மகாணங்களில் பொதுக்கூட்டங்கூடிவருவதைத் தடுக்க அதிகாரம் கொடுக்கும் சட்டத்தை 6-மாசகாலத்துக்கு அவசரநிமித்தம் ஊர்ஜிதத்துக்கு கொண்டுவந்ததாக விளம்பரப்படுத்தினர். இப்பொழுது 5-மாசகாலமாக அச்சட்டத்தை யனுசரித்து நடந்துவந்ததிலுண்டான அனுபவத்தைக்கொண்டு, அதிலுங்கொடுமையான சட்டமொன்று செய்யக்கருதி அதற்காக, கவர்னர்-ஜெனரலுடைய சட்டநிருபண சபையில், "இராஜவிரோதமான கூட்டங்களைத்தடுக்க வேண்டியதற்கான சட்ட மசோதாவொன்று ஆலோசனைக்குக் கொண்டுவந்திருக்கிறார்கள். இந்தச்சட்டப்படி, வீட்டிலானாலும், வெளியிலானாலும் 20 பேர்களுக்கு மேற்பட்டவர்கள் ஒன்றுகூடி எந்த இராஜாங்கவிஷயத்தையாவதுபற்றிப் பேசுவதாயிருந்தால், போலீசுக்கு ஒருவாரத்துக்கு முன்னே நோடீஸ் கொடுத்து, அவர்களுடைய அனுமதிபெற்றுக்கொண்டு அவர்கள் மத்தியிலேயே பேசவேண்டும். அப்படிச்செய்வதில் இராஜாங்க விரோதமானவார்த்தைகள் வந்தாலும், கலகாஸ்பதமானவார்த்தைகள் பிறந்தாலும், போலீஸாரால் வாரண்டில்லாமலே பிடித்து, விசாரித்து 6 மாசக்காவல் அல்லது அபராதம் அல்லது இரண்டும் தண்டனையாக விதிக்கப்படுவார்கள். இது மிகவும் ஒரு அதிசயமான சட்டமே!

## "மெய்யேவெல்லும் பொய்யல்ல."

### இராஜாம்பாள்சரித்திரம்.

(76 வது பக்கத்தொடர்ச்சி.)

II.

உலகத்திலுள்ள பாக்கியங்களெல்லாவற்றிலும் புத்திரபாக்கியம் பெரிது. ஆனால் பெற்றவர்களெல்லாம் பிள்ளைகளாகார்கள். சுத்குண சம்பத்தோடுசேர்ந்த சாத்விகப் புத்திரர்களைப்பெற்றால் அதைவிடப் பெரும்பாக்கியம் வேறுஇல்லை. இப்படியிருக்க சத்தியவிரதரும், சாத்விகருமான சாமிநாதசாஸ்திரிகளுக்கு ஸ்ரீதேவியின் அம்சமே அவதாரமானாற்போல இராஜாம்பாள்என்னும் திவ்யபுத்ரி பிறந்திருக்க, புத்திரனில்லாக்குறையையும் அவளது புத்திரட்ப விசேஷத்தினால் அவர் பாராட்டாது, நமக்கு எல்லாச்சம்பத்தும் இந்தப் புத்ரிகாரத்னத்திலே யமைந்திருக்கிறதென்றுநம்பி உள்ளும்புறமும் அந்தஎண்ணத்தினால்நிறைந்து திர்ப்திபடைந்துவந்த அவர், ஏதோ அகஸ்மாத்தாக நேர்ந்தபுத்திப்பிரமையில், தட்டுக்கெட்டு வாக்கை கொடுத்துவிட்டு, "நான் ஜன்மமெடுத்து இன்றுவரையில் சொன்னவார்த்தை தட்டிநடந்தவனல்ல. அப்படிப்பட்டவனென்று தெரிந்ததனால் தான் என்னை சிக்குமுக்கில் கொண்டுபோய் விட்டு பிடித்தபிடியிலே வாக்களிக்கும்படி செய்துவிட்டார்கள். இப்போது யோசித்துப்பார்க்கையில், அப்படி வாக்குக்கொடுத்த நாக்கை வெட்டிவிடவேண்டுமென்று தோற்றுகிறது. மேலும் நான் விடுதலைபடையும் பொருட்டு என் உயிரினும்சிறந்த இருவர்க்குத் தீராவிசனத்தை யடையும்படி செய்தேன்"—என்று வருத்தப்பட்டுக்கொண்டிருக்கிறதைப்பார்த்து, புத்திசாலியான இராஜாம்பாள் ஒருநிமிஷத்தில் விஷயத்தைக் கிரகித்துக்கொண்டு, இந்த சங்கடத்தில் தான் அதைரியத்துக்கிடங்கொடுக்கக் கூடாதென்றெண்ணி, உள்ளத்தில் உன்னினமாத்திரத்தில், அவள் சிறுபெண்ணாயிருந்தும்,பாரதூர யோசனைநிறைந்த புத்திசாலிபோல் நடந்துக்கொண்டாள்.

இந்தியாவில் நமதுபெண்கள் படியாதவர்களென்றும், ஆகையால் உயிர்வாழ்க்கைக்கு யோக்கியமான உயிர்த்துணையாகவின்றி அவர்கள் தங்கள்புருஷர்களுக்கு கால்கட்டுக்கட்டைகளாக விருக்கிறார்களென்றும் சொல்வதுண்டு. ஏன்! இந்தக்கதையில் சாமிநாதசாஸ்திரிகள் பத்னியே இதற்குக்கண்கூடான உதாரணமாகவுமிருக்கின்றாள்! இருந்தாலும் எல்லாரும் அவித்தியாபுஞ்சமென்று எப்படிச்சொல்லலாம்? ஸ்ரீமத் இராமகிருஷ்ண பரமஹம்ஸர் திருவாய்மலர்ந்தருளியபடி ஸ்ரீகள் வித்யாம்சமென்றும் அவித்யாம்சமென்றும், இருவகைத் தாயிருக்கிறார்கள். வித்யாம்சமானவர்கள் எப்பொழுதும் வாழ்க்கைத்துணைக்கிசைந்தவர்களாய் பூலோகதேவதைகளென்று சொல்லும்படி தங்களைப்பற்றினரெல்லாரையும் நல்லவழியில் திருப்பித் தாங்களும் அவர்களையனுசரித்து நல்லவழியில் நடந்து இகபரமிரண்டுக்கும் ஏற்ற சாதனமாக உதவுகிறார்கள். அவித்யாம்சர்களோ இதற்கு விரோதமாய் மனிதனைப்பந்தப்படுத்தும் ஸ்வபாவமுள்ளவர்களாக விருக்கிறார்கள். தெய்வப்புலமைத் திருவள்ளுவநாயனாரும் இவ்விருவகையாரை மனதிற்கொண்டே,

> "பர்த்தாவுக்கேற்ற பதிவிரதையுண்டானால்
> எத்தாலு மொத்து வாழலாம்-சற்றேனும்
> ஏறுமாறாகவிருப்பாளேயாமாயின்
> கூறாமற்சந்நியாசம் கொள்"—

என்று சொன்னார்.

சிப்பியில் முத்துப்பிறந்ததுபோலும் அவித்யாம்சத்திலிருந்து வித்யாம்சமுண்டானதுபோலும் புதித்த இராஜாம்பாள், தனது அருமைத்தகப்பனார் தன் பொருட்டு கொடுக்கக்கூடாத வாக்குக்கொடுத்துவிட்டோமேயென்று வருத்தப்படுகிறார் என்றும், அப்படித்திரும்பினால் சத்தியவிரதத்திற்குப் பங்கமும் இப்படித்திரும்பினால் தன்னுயிருக்குயிரான குழந்தைக்குச் சங்கடமும் நேர்வதாயிருப்பதைக்குறித்து தர்மசங்கடத்தில் மூழ்கி வருத்தப்படுகிறாரென்றும் தெரிந்ததும், 13-வயதாகச் சிறுமியானாலும் இராஜாம்பாள் தான் சித்சக்தியின் அவதாரமோயானாற்போல் வெகுதிடமாகவும் கெம்பீரமாகவும் நடந்து கொண்டாள்.

"அப்பா எப்படியாவது தாங்கள் வாக்குக்கொடுத்த வரைக்கும் சொன்னபிரகாரம் செய்துகொடுப்பதே நன்மைபல்லது தாங்கள் வேறு யோசனை சொல்வதில் பிரயோஜனமில்லை. ஆகையால் தாங்கள் வாக்குக்கொடுத்த பிரகாரம் முகூர்த்தம் வைத்து நிச்சியார்த்தம்

செய்ய ஏற்பாடு செய்யுங்கள். இனி யோசனை செய்வதில் பிரயோஜனமில்லை" என்று சொல்லிப் பிராரப்த கர்மத்தைப்பற்றி வேதாந்தம் பேசப் புகுந்து விட்டாள்.

"ஆழ அமுக்கி முகக்கினும்,
நாழிமுகவாது நானாழி—தோழியே
நிதியுங் கணவனும் நேர்படினுந்தத்தம்
விதியின் பயனேபயன்."

"யார்யாருக்குப் பிராப்தம் எங்கேயிருக்கிறதோ அங்கே தான் நடக்கும். கடவுள் விட்டபடி விடட்டும்."—என்று துணிந்து ஸப் மேஜிஸ்திரேட்டு நீலமேகசாஸ்திரிகளுக்கே தான் வாழ்க்கைப்படச் சம்மதித்துவிட்டதாக, இராமண்ணா வாத்தியாரைக் கூப்பிட்டு அவருக்குச் செய்திசொல்லி யனுப்பச்சொன்னாள்.

இராமண்ணாவுக்கு இது பழம்நழுவிப் பாலில் விழுந்ததுபோலாயிற்று. பிராமண ஜன்மமெடுத்தும் பெரும்பித்தலாட்டக்காரனான இராமண்ணா, உடனே நீலமேகசாஸ்திரிகளிடம் போய் தான் மந்திரவாதியைக்கொண்டு இராஜாம்பாள் மனதைத் திருப்பிவிட்டதாகப் புளுகி, அவரை உற்சாகப்படுத்திவிட்டான். நீலமேகசாஸ்திரிகளுக்கு இராஜாம்பாள் தானே நேரில் அவரைக்கண்டு கலியாணம் பேச விரும்புகிறாளென்று தெரிந்ததும் பித்தம் தலைக்கேறிப்போய்விட்டது, தன்னைப்போல் பாக்கியசாலிகள் உலகத்தில் பிறந்ததேயில்லையென்று எண்ணிக்கொண்டு மாப்பிள்ளை வேஷம் போட்டுக்கொண்டு இரட்டைக்குதிரைவண்டியிலேறி வெகுமுடுக்காய் இராஜாம்பாளை நேரில் கண்டு கலியாணம் பேசச் சென்றார்.

அந்தக் கலியாணபுருஷனைப் பார்த்ததும் இராஜாம்பாள்உள்ளத்தில் என்ன எண்ணங்கள் உதித்திருக்குமோ அதை அறிய வகையில்லை. ஆனால் நீலமேகசாஸ்திரிகள், தன்னைக் கண்டதும் சாஷ்டாங்கமாக நமஸ்கரித்த அந்தப் பெண்மணியைக்கண்டு அவள் தன் குழந்தைக்குக் குழந்தையென்று வாரியெடுத்துமடியில் வைத்து உச்சிமுகர்ந்து உடம்பெல்லாம் தடவிக்கொடுத்து, உண்மையாகவும், தர்மமாகவும் அவர் அனுபவிக்கக் கூடிய சந்தோஷத்தை யனுபவிக்கத்தெரியாமல், அவளிடத்தில் மோகங்கொண்டு, தாபங்கொண்டவன்போல் தட்டுக்கெட்டுத் தடுமாறி ஆசை வார்த்தைகள் பேசி அபிநயம் காட்ட, இராஜாம்பாள் தூரத்தில் ஒதுங்கிநின்றுகொண்டு நாளைக்குக் கலியாணமாகிவிட்டால் இருவரும் மனோரதப்படி ஒன்றாயிருக்கலாமென்றும், அதுவரையில் உலகதர்மத்துக்குக் கட்டுப்பட்டுநடக்கிறதே யுத்தமமென்றும் சொல்லி, அவர் விரகறியா அக்குழந்தையைக் குழந்தையென்று பாராமல், குருட்டுக் கண்ணால் பார்த்து "ஏன் ஆடையாபரணாலங்கிருதஸ்தளாகவில்லை? நகையில்லாக் குறையானால் நான் எவ்வளவு வேண்டுமானாலும் வாங்கிக்கொடுக்கிறே"னென்று சொல்ல, இராஜாம்பாள் தன்னையிகழ்ந்துகொண்டு அவரை நன்றாக ஸ்தோத்திரஞ்செய்யத் தொடங்கினாள்:—

"பதவியில் இந்திரனுக்கும், அழகில் மன்மதனுக்கும், சம்பத்தில் குபேரனுக்கும், ஈகையில் கர்ணனுக்கும், சாமர்த்தியத்தில் அர்ஜ்ஜுனனுக்கும், பலத்தில் பீமசேனனுக்கும், சத்தியத்தில் அரிச்சந்திரனுக்கும் சமானமாகிய தங்களைக்கலியாணஞ்செய்துகொள்ளப் பூர்வஜன்மத்தில் நான் எவ்வளவு தவஞ்செய்திருக்கவேண்டும்; நான் ஜன்மமெடுத்ததற்கு அவ்வளவே எனக்குப்போதுமானது." என்று சொன்னதைக்கேட்டு நீலமேகசாஸ்திரிகள் "என்னை நையாண்டி செய்கிறாய் போலிருக்கிறது" என்று வெகு அமரிக்கையாய் தனது யோக்கியதையைத்தானறிந்திருப்பதாகச்சொல்லியும், இராஜாம்பாள் அவருக்குத் தோத்துப்போகாமல்,—

"தாங்கள் அப்படித்தான் சொல்லுவீர்கள். என்னைப்போல் வெம்போக்கியை அப்படியெல்லாம் சொன்னால் வாஸ்தவத்தில் நம்மை மெச்சிக்கொள்கிறார்களென்று எண்ணிக்கொள்வான்; ஆனால் தங்களைப்போல் சகலகுணங்களும் பொருந்தியவர்கள் அப்படிச்சொல்வது சகஜந்தான். அதிருக்கட்டும்! மேல் நடக்கவேண்டிய காரியாதிகளைச் சொல்லுங்கள்." வதூவரனிருவர்களும் இப்படி சம்பாஷித்து ஒருவர் மனோநிலையை யொருவர் தம்தம் சாமர்த்தியத்துக்குத்தக்கபடி யறிந்துகொண்டார்கள். இராஜாம்பாள் ஒரு வரம் கேட்டுக்கொண்டாள். அது என்னவெனில்:- "இந்த ஊரிலுள்ளவர்களையெல்லாம் சந்தோஷப்படுத்திக்கலியாணம் செய்தால் நலம்"—

அது எப்படியென்றால், "நமது கலியாணத்திற்குப் பத்துநாள் முன்னாலிருந்து இந்த ஊரிலுள்ள ஜனங்கள் எல்லோருக்கும் அவரவர்கள் ஜாதியாசாரத்திற்குத் தகுந்தபடி, பூரி, அல்வா, வடை, பாயசம், லட்டு, ஜிலேபி முதலிய பலகாரங்களுடன் பத்துநாளும் சாப்பாடு போடவேண்டும்; ஏழைகளெவ்வொருவருக்கும் மூன்றுசேலை, மூன்று ஜதை வேஷ்டிகள் விதம் வரப்பட்டவர்களெல்லாருக்கும், கலியாணத்துக்கு முதல்நாள் பெண்களுக்கு சேலைகளும், ஆண்களுக்கு வேஷ்டிகளும் கொடுக்கவேண்டும். இதுதான் எனக்காகத்தாங்கள் செய்யவேண்டியது. தங்கள் கௌரதைக்குத்தக்கபடிதான் கலியாணஞ்செய்வீர்களே; அதைக்குறித்து என்னைக்கேட்கவேண்டாம்."—என்று இராஜாம்பாள் வாய்திறந்து சொல்லவும், நீலமேக சாஸ்திரிக்கு உச்சி குளிர்ந்து போய்விட்டது. தான் சேர்த்து வைத்த 10-லக்ஷ ரூபாயும் செலவானாலும், இராஜாம்பாள் மனதைத்திருப்திசெய்தே அவளைக்கலியாணம் செய்துகொள்ளவேண்டுமென்று அவருக்கு உள்ளத்திலுதித்துவிட்டது. உதிக்கவும் 30-வருஷங்களாக அதர்மத்திற் சேர்த்தபணமெல்லாம், அத்தனை நாள்களில் தர்மவழியில் செலவாகியவரை விட்டு ஓடிவிட்டன.

கலியாணச்சந்தடி பலமாயிருக்கையில், நீலமேகசாஸ்திரி மாப்பிள்ளைவேஷம் போட்டுக்கொண்டு பட்டணப்பிரவேசம் செய்து பெண் வீட்டில் வந்திறங்கினார்; வெகு ஆர்ப்பாடத்தோடு மாப்பிள்ளை வந்திறங்கினதும் மணப்பெண்ணை வீட்டில் காணக்கூடவில்லை. எங்கெங்கும் அன்றிரவே தேடினார்கள். அந்த வூருக்கு வெளியில் அப்பெண்ணின் பிணம் பாதி வெந்து கருகினஸ்திதியிலகப்பட்டதென்றும் அவளை பால்யம் முதல் நேசித்த கோபாலன் அவளைக்கொன்றுவிட்டதாகக் லைக்குற்றஞ்சாட்டப்பட்டு ஜெயிலிலிருக்கிறானென்றும் தெரியவந்தது!

கேஸ் நீலமேகசாஸ்திரி முன்னிலேயே விசாரணைக்குவர, அவர் பிரதமவிசாரணைசெய்து கோபாலனை ஸெஷன்ஸ் கோர்ட்டில் விசாரணை செய்யப்படவேண்டி குற்றப்பத்திரிகை தயார்செய்து அனுப்பிவிட்டார்.

கதையிலுள்ள ஸ்வாரஸ்யமெல்லாம் இனிமேல்தான் இருக்கிறது. கொலைசெய்யப்பட்டதார், கொலைசெய்தவன்யார்—என்று நன்றாகத்துப்பு அகப்படாவிட்டாலும், போலீஸார் இராஜாம்பாள் காணாமற்போனதையும், கோபாலன் சுடுகாட்டில் ஒருசவத்தைக்கட்டிக்கொண்டிருந்ததையும் கொண்டு கொல்லப்பட்டவள் இராஜாம்பாள்தானென்றும் கொலைசெய்தவன் கோபாலன் தானென்றும் தங்களுக்குள் தீர்மானித்துக்கொண்டு, அதற்கு சரியாத சாக்ஷியங்களை இட்டுக்கட்டிச் சரிப்படுத்தி கோபாலன் கழுத்துக்குச் சுருக்குக் கயிறு தயார் செய்துவைத்து விட்டார்கள்.

ஆனால் நாமொன்று நினைக்க தெய்வமொன்று நினைக்கிறது. இராஜாம்பாள் காணாமற்போனதற்கு முந்தி தான் கோபாலனைக் கலியாணம் செய்துகொள்ளப் போவதாகவும், நீலமேகசாஸ்திரி துராகிருதமாய் அவரை ஹிம்சைப்படுத்தி வாக்குறுதி வாங்கினதினால், அவனைக் குதிரைச்சவுக்காலடிக்கத் தான் ஆண்பிள்ளையாகவில்லாமல், பெண்பிள்ளையாயவதரித்ததால் தனக்குண்டான சூக்ஷ்ம புத்தியைக்கொண்டு, அவன் லஞ்சம் வாங்கிச் சேர்த்தபணத்தையெல்லாம் தர்மவழியில் ஏழைகளுக்குபகாரமாகச் செலவழிக்கச்செய்து, அவனையும் பைத்தியக்காரனாக்கி அவமானம் செய்து, கடைசியில் புருஷன்புத்தியைவிட பெண்புத்தியின் சூக்ஷ்மத்தைக்காட்டத், தானிஷ்டப்பட்டகணவனையே இரகசியமாய் விவாகம் செய்துகொள்ளப்போய்விட்டதாகவும் அவள் எழுதிவைத்துப்போன கடிதத்தினால் தெரியவந்தது.

இந்தக் கொலைக்கேஸ் விசாரணை அர்பத்நட் குற்றக்கேஸ் விசாரணையைவிட நீடித்ததும் பிரபலமுமானதாயிருந்தது. போலீஸார் சூழ்வினை பலிக்காமற்போக, இடையில் "கோவிந்தன் என்பான் ஒருகாலைபுகுந்து," பொய்யையெல்லாம் கண்டுபிடித்து, மெய்யைவெளியாக்கி, கோர்ட்டார் கேஸ்விசாரணைசெய்து ஜூரிகளும் தீர்ப்பு சொல்லத் தயாராயிருந்த சமயத்தில், அவன்மேல் இரத்தகாயம்பட்டு, இரத்தவெள்ளப்பெருக, வெகுநாள் சிறையில் வைக்கப்பட்டிருந்ததால், வாடி வதங்கிச் சருகுபோலுலர்ந்துபோனசரீரத்தை யுடையளான ராஜாம்பாளைச் சிறைமீட்டுத் தூக்கிக்கொண்டு, ஜூரிகள் தீர்ப்புச் சொல்லவிருக்கும் தருணத்தில் பரபரக்க இராஜாம்பாளைக்கொண்டுவந்து கோர்ட்டுமுன் நிறுத்தினான். கொ

லைசெய்யப்பட்டவள் உயிர்பெற்று வந்து நின்றதால் கோபாலனைக்குற்றவாளியென்று ருஜுப்படுத்தப் போலீஸார் விட்ட சாக்ஷியமெல்லாம்பொய்யாகப் போய்விட்டது. கோவிந்தன் செய்த சாமர்த்தியத்தால், கோபாலன் விடுதலையானதும், உண்மையாகக்கொலைசெய்யப்பட்டபெண், ஒரு தாசியென்றும், அவளைக்கொலைசெய்தவன்,கனகவல்லியின் அருமைத்தம்பியும், இராஜாம்பாளுக்குத் தாய்மாமனுமான நடேசன் என்றும் சாக்ஷியம் வெளிப்பட்ட உடனே அந்தக் கோர்ட்டில் அவனுடைய ஆசைக்கண்ணாட்டியான லோகசுந்தரியென்னும் பணம்படைத்தபாலவிதந்துவுடன் வந்திருந்த அந்த நடேசன் பிடித்துக்கைது செய்யப்பட்டான் இராஜாம்பாளுக்கு விரோதமாகச் சூழ்வினைசெய்துவந்த லோகசுந்தரியும் அந்தக்குற்றத்திற்கு உடந்தையாகவிருந்ததாகப்பிடித்துக் கைதுசெய்யப்பட, அவள் அவமானம் பொறுக்கக்கூடாமல் ஜெயிலிலிருந்தபடியே இறந்துவிட்டாள். கடைசியில் கோபாலன், இராஜாம்பாளைக்கலியாணம் செய்துகொண்டு சுகமாய் வாழலானான். தன்வினை தன்னைச்சுடுமென்பதாகப் பொய்புரட்டுப் பித்தலாட்டம் செய்தவர்களெல்லாம் இராஜதண்டனையோ, தெய்வதண்டனையோ அடைந்து அவரவர்கள் செய்தகருமத்தின் பலனையனுபவித்தார்கள். இராமண்ணாவுக்கு இரண்டு கண்களும் அவிந்துபோய்விட்டன. இதையெல்லாம் புஸ்தகத்தில் வாசித்தனுபவிக்கவேண்டும். “மெய்யேவெல்லும் பொய்யல்ல” என்பதனுண்மையை வற்புறுத்த தற்காலத்தில் பிரசுரமாகும் கதைகளில், இந்த இராஜாம்பாள் சரித்திரத்தைவிட, இக்காலத்துக்கேற்ற அற்புதக்கதையொன்றை நாம் பார்த்ததில்லை. காலசுபாவத்தையும் காலமாறுபாட்டையும் விளக்க காலத்துக்கேற்றபடிகதைகளை யெழுதிப்பிரசுரிக்கிறவர்கள் உலகுக்குழைக்கும் உண்மையான உபகாரிகளாகிறார்கள்.

---

# *அவிழ்த்து விட்டகழுதை.

(தொடர்ச்சி)

3. பாலியம் (தொடர்ச்சி.)

—:o:—

எனக்குப் பனிரண்டாவது வயதில் நான் படித்துக்கொண்டிருந்த பள்ளிக்கூடம் எடுபட்டுப்போய்விட்டது. அதே ஊரில் இன்னொரு பள்ளிக்கூடம் இருந்தபோதிலும் அதில் முழுச்சம்பளமும் கொடுப்பவர்களைமட்டுமே சேர்த்துக்கொள்ளுகிறதாயிருந்தபடியாலும், உயர்ந்தபடிப்புகளுக்கு வேண்டிய முழுச்சம்பளமும் கொடுக்க என் தகப்பனாருக்குச் சக்தியில்லாமையாலும் நான் திருச்சினாப்பள்ளிக்குப்போய் படிக்கவேண்டியதாக நேரிட்டது. அப்படியே திருச்சினாப்பள்ளி ‘காலேஜ்’ என்று சொல்லப்பட்ட பாதிரிமார்கள் பள்ளிக்கூடத்தில சம்பளமில்லாமல் சேர்த்துக்கொள்ளப்பட்டேன். இதனால் நான் படிப்பது நாலாவது ஐந்தாவது வகுப்பாயிருந்தபோதிலும், பி. ஏ. வகுப்பில் படிக்கும் பிள்ளைகளுடைய சிநேகம்கிடைத்தது.

எங்கள் கிராமத்துக்கும் திருச்சினாப்பள்ளிக்கும் சுமார் நூறு மைல் தூரம். ரயில்கிடையாது. தபால் வண்டி என்று சொல்லப்பட்ட குதிரைவண்டிகள் தானுண்டு. அவைகள் சர்க்கார் தபால்களைக்கொண்டுபோக ஏற்பட்டவைகள். ஆனால் ஜனங்களும் பணம் கொடுத்து சீட்டு வாங்கிக் கொண்டு அதில் பிரயாணம் செய்யலாம். ஒருவண்டிக்கு உள்ளே நாலுபேரும் வண்டிக்காரனுடைய ஆசனப்பெட்டியில் அவன் பக்கத்தில் ஒருவனும் ஆக வண்டிக்காரனைச்சேர்த்து ஆறுபெயர்கள் ஏறிக்கொள்ளலாம். சாமான் ஏதாவதிருந்தால் வண்டிக்கூரைமேல் கயிற்றைப்போட்டுக்கட்டியும், வண்டிக்குப் பின்புறத்திலுள்ள பெட்டியிலும் வைத்துக்கொள்ளவேண்டும். விடியற்காலமே நாலைந்து மணிக்கு வண்டிகட்டினால் அஸ்தமனத்துக்கு வந்து சேரலாம். தினம் ஒரு வண்டி போய்க்கொண்டிருக்கும்; இன்னொருவண்டி வந்துகொண்டிரு

* தன்னையறிந்து தன் தொழிலில் பிரவேசிக்கும் மனோதர்மசக்தி தடையறியாது.

க்கும். ஆக இரண்டுவண்டிதான் சர்க்கார் தபாலுக்காக ஏற்பட்டவை. ஆனால் இதுதவிர இரண்டொரு முதலாளிகள் தங்கள் சொந்தத்திலேயே வண்டிகுதிரைகள் வைத்து வாடகைக்கு ஜனங்களேற்றிக்கொண்டு வியாபாரம் செய்து வந்தார்கள். ஸ்ரீரங்கத்தில் ஏதாவது உத்ஸவம் ஆரம்பித்தால் வண்டி வாடகை உயர்ந்துபோம். சாதாரண நாட்களில் ஆளுக்கு ஒரு ரூபாய். உத்ஸவம், பள்ளிக்கூடம் சாற்றுதல், திறத்தல், முதலிய விசேஷ நாட்களில் ஆளுக்கு ஒன்றேகால் அல்லது ஒன்றரை ரூபாய் கூடக்கேட்பார்கள்.

இந்த நாளில் பிள்ளைகள் காலை 7 மணிக்கு வீட்டில் சாப்பிட்டு விட்டு ரயிலேறி 10 மணிக்கெல்லாம் பள்ளிக்கூடம் வந்து விடுகிறார்கள். வழிமுழுவதும் தூங்கிக்கொண்டே வரலாம்; ஆடுதல், அசைதல், வலிஎன்பதுகிடையாது; திருடர்பயம் கிடையாது. இரும்புப்பெட்டியில் புஸ்தங்களையும் வேஷ்டிகளையும், பணத்தையும் வைத்துப் பூட்டி சாவியை சட்டைப்பையில் போட்டுக்கொண்டு ரயிலைவிட்டு இறங்கினதும், கைகட்டிக் காத்துக்கொண்டிருக்கும் கூலியாட்களிடத்திலாவது ஜட்காவண்டிக்காரர்களிடத்திலாவது தங்கள் மூட்டைகளைக் கொடுத்துவிட்டுப் போய்விடுகிறார்கள். சாவிநம்மிடத்தில்தானே இருக்கிறதென்று தைரியம்! இப்படிக்கவலையற்ற பிள்ளைகளுக்குப்படிப்பு எப்படி வரும்? கஷ்டப்பட்டாலல்லவோ வித்தையின் அருமைதெரியும். தபால்வண்டியின் பெருமையை அறியாதவர்களுக்கு அதைபற்றிகொஞ்சம் சொல்லுவோம்.

அந்த நாட்களில் வழியில் திருடர் பயமுண்டு. அதற்காகப்பகலிலேயேதான் பிரயாணம் செய்கிறது வழக்கம். இரவில் 7 மணிக்கு மேல் ஒரு வண்டியும் ஒரு இடத்துக்கும் போகாது. ஆனால் நிலவு நாட்களில் மட்டும் மூட்டை வண்டிகள் இருபது முப்பதாகச் சேர்ந்து பிரயாணம் போவதுண்டு. வழியில் பதினைந்து இருபது மைலுக்கொருதரம் குதிரையும் வண்டிக்காரனும் மாறுவார்கள். வண்டிவருகிற சமயத்துக்குக் குறிப்பிட்ட ஒரு இடத்தில் புதியவண்டிக்காரனும் புதிய குதிரையும் காத்துக்கொண்டிருப்பார்கள். இவர்களிடத்தில் வண்டியையும் ஜனங்களையும் ஒப்புவித்துவிட்டுப் பழையவண்டிக்காரனும் குதிரையும் நின்று விடுவார்கள். திரும்பிப்போகிற அடுத்த வண்டியும் அதே இடத்தில் நிற்குமாதலால் அதுவருமளவும் காத்திருந்து அந்த வண்டிக்காரனையும் குதிரையையும் விடுவித்துத்தானும் தன் குதிரையுமாக அந்த வண்டியுடன் தன்னூருக்குத்திரும்பிப் போய் விடுவார்கள். இவ்வாறு எங்களூர் போவதற்குள்ளாக ஐந்தாறிடத்தில் குதிரைமாற்ற வேண்டியிருக்கும். வழியில் இரண்டிடத்தில் பணத்துக்கு சாப்பாடு போடுகிற வீடுகளுமுண்டு.

இந்த வண்டிகளெல்லாவற்றிலும் பள்ளிக்கூடத்துப்பிள்ளைகள் விரும்புவது சர்க்கார்தபால் வண்டிதான். ஏனெனில் வண்டிக்காரன் சர்க்கார்பில்லைபோட்ட சட்டைபோட்டுக்கொண்டிருப்பான். தபால்வண்டியாதலால் அதன் வரவை ஜனங்களுக்குத் தெரிவிக்கும் பொருட்டு ஊதுகொம்பு ஊதிக்கொண்டேபோவான். வழியிலிருக்கும் கிராமங்களுக்கெல்லாம் இந்த வண்டியே கடியாரம். கடியாரத்துக்குக்காலத்தில் சாவிகொடுக்காவிட்டால் அதை நம்பமுடியாது. தபால் வண்டியை எப்பொழுதும் நம்பலாம். வண்டிக்கு இருபுறத்திலும்சர்க்கார்கொடிகள் கட்டி படபடவென்று காற்றில் அலங்காரமாய் அடித்துக் கொண்டிருக்கும். கடைசியாக சர்க்கார் குதிரைகள் விசேஷமாகப் பட்டாளத்தில்பழகிய குதிரைகளாகவேயிருக்குமாதலால் பார்வைக்கு அழகாயும் வெகுவேகமாயும் போகக்கூடும் குதிரைகளாயிருக்கும். வண்டிக்காரனும் விசேஷமாக பென்ஷன் வாங்கிக்கொண்ட சிப்பாயாகவேயிருப்பான். அவனுக்குத் துப்பாக்கி வைத்துக்கொள்ளவும், வண்டியை தடுப்பவர்களை சுட்டு விடவும் அதிகாரமுண்டு. ஆதலால் சர்க்கார் தபால்வண்டியவ்வளவு வேகமாக மற்றவண்டிகள் போகாது என்றும் அதுவே பத்திரமானது என்றும் ஏற்படும். சிலசமயம் அவனுக்கு ஏதாவது பலகாரம் வாங்கி சாப்பிட ஒரு அணா கொடுத்தால் நம்கையில் கடிவாளங்களைக் கொடுத்து ஓட்டச்சொல்லிவிட்டுத் தான் சும்மா பார்த்துக்கொண்டு வருவான். நமக்கு நன்றாய் ஓட்டத்தெரியாவிட்டால் கற்றும்

கொடுப்பான். ஆதலால் கிருஷ்ணபகவானுடைய லீலைகளில் ஒன்றாகிய சாரத்தியத்தில் விருப்பமுள்ள பிள்ளைகள் வண்டிக்காரன் பக்கத்தில் அவனுடைய ஆசனப்பெட்டியில் இடம் கிடைத்து விட்டால், இந்திரனுடன் அர்த்தாஸனம் கிடைத்தது போல் சந்தோஷப்படுவார்கள். குளிருக்குப் பயந்தவர்களாயும், ஆஸனத்திலிருந்து நழுவி விழாதபடி உறுதியாய் உட்கார சக்தியற்றவர்களாயும், வண்டிக்கு வெளியே வண்டிக்காரனுடன் உட்காருவதை அகௌரவமாக நினைப்பவர்களாயுமுள்ள சில பெரியமனுஷர்கள் வீட்டுப்பிள்ளைகளைத்தவிர இந்த ஆஸனத்தை யார்தான் விரும்ப மாட்டார்கள்? பள்ளிக்கூடம் சாற்றி அவரவர் ஊருக்குப்போகும்போதும், திரும்பிப்பள்ளிக்கூடம் திறந்து வரும்போதும், கூடியமட்டும் நாலைந்து பிள்ளைகளாகச் சேர்ந்து ஒரு முழுவண்டியையும் வாடகை பேசிவிடுவது வழக்கம். சாரத்தியத்தில் இஷ்டமுள்ளவர்கள் ஒவ்வொருவரும் கொஞ்சநேரம் முன் பெட்டியில் உட்காரும்படி தங்களுக்குள் ஏற்பாடு செய்து கொள்ளுவார்கள்.

இந்த நாளைய ரயில் வண்டிப்பிரயாணம் வெகு நாகரிகம் என்றும் வெகு சௌகரியம் என்றும் பெருமை பேசிக்கொள்ளுகிறார்கள். நாகரிகம் சௌகரியம் எல்லாம் கையாலாகாத சோம்பேறிகளுக்கு வேண்டுமேயொழிய, வேகமான ஓட்டத்தின் பெருமையையும், சக்தியையும் அழகையும் நாமே நம்முடல் முழுவதும் உணர்ந்து ஆநந்திக்கவேண்டுமானால் தபால்வண்டியின் முன்புறத்துப் பெட்டியில் உட்கார்ந்து பார்த்தாலொழிய வேறு வழியில்லை. ரயில்வண்டி வேகமாகப்போகிறது வாஸ்தவந்தான். ஆனால் அதன் ஓட்டத்தை யார் கண்ணால் கண்டார்கள்? அதன் வேகம் நமக்கெங்கே பிரத்தியக்ஷமாகத்தெரிகிறது? யாரோ ரயில் வண்டி மணிக்கு நாற்பது மைல் போகிறதென்று சொன்னதைக் கொண்டாவது, புஸ்தகத்தில் படித்ததைக் கொண்டாவது, அல்லது திருச்சினாப்பள்ளியை விட்டுப் புறப்பட்டு ஒருமணிக்கெல்லாம் 'தஞ்சாவூர்' என்று ரயில் சேவகன் கூவுகிறதையும், ஏற்கனவே நாம் நடந்து போனபொழுது தஞ்சாவூருக்கும் திருச்சினாப்பள்ளிக்கும் நாற்பது மைலிருப்பதைப் பிரத்தியக்ஷமாகப் பார்த்ததையும் கொண்டாவது தான் ரயில் வண்டியின் வேகத்தை ஊகிக்கவேண்டியிருக்கிறது. ரயில் சேவகன் 'தஞ்சாவூர்' என்பதற்குப் பதிலாக எழும்பூர் என்று கூவினாலும், அல்லது இந்திர ஜாலவித்தையினால் தஞ்சாவூர் இருக்கவேண்டிய இடத்தில் எழும்பூரை வரவழைத்திருந்தாலும் நம்மால் கண்டுபிடிக்க முடியாது. எழும்பூரென்றே நம்பவேண்டியதுதான். மேலும் கொஞ்சங்கூட உடம்பு அசையாவிட்டால் வண்டியின் வேகத்தை எப்படி கண்டுபிடிக்கமுடியும்? தண்டவாளத்தின்மேல் வெகுவழுவழுப்பாய்ப்போகும் ரயிலில் பிரயாணம் செய்பவனுக்கும் வீட்டில் கட்டிலில் படுத்துத் தூங்குபவனுக்கும் வித்தியாசமில்லை. அதற்கேற்றபடியே பாருங்கள், ரயிலிலும் தூக்கம் வந்துவிடுகிறது, மூட்டுப்பூச்சியும் அடைந்திருக்கிறது. தபால் வண்டியிலாவென்றால் அப்படியல்ல. முன்பெட்டியில் உட்கார்ந்து பிரயாணம் செய்யப்பழகினவனை 'குஸ்தி' சண்டையிலும் இலகுவில் கீழே தள்ளமுடியாது. வண்டி எவ்வளவோ விதமாக ஆடி அசைத்து அவனைக் கீழே தள்ளப்பார்க்கும். இவன் அதற்கிடங்கொடாது தன்னிடத்தைக்காப்பாற்றிக் கொள்ள வேண்டும். நம்முடைய ஹிருதயம் குலுங்குகிற மாதிரியைக் கொண்டே குதிரை பாய்ச்சலில் போகிறதென்றும், நடையில் போகிறதென்றும், அந்த நடை மட்டநடையா, குட்டை நடையா, வீச்சு நடையா, பெருநடையா, நெடு நடையா, பக்கநடையா என்றும் மணிக்கு இத்தனைமைல் போகிறதென்றும் சொல்லிவிடலாம். ஆதலால் குதிரை வண்டியின் வேகத்தைஅறியப் பிரத்தியக்ஷத்தைததவிற வேறு பிரமாணம் வேண்டியதில்லை. நம்முடைய வேகத்தை நாமே பார்க்கிறோம், உடம்பு முழுவதும் உணர்கிறோம்; ஆதலால் வண்டியின் வேகத்தைப்பற்றிப் பிறரைக்கேட்கவாவது பேசவாவது அவசியமென்ன? இரண்டாவது, ரயில் பிரயாணத்தில் உயிரற்ற நெருப்பும் நீராவியும நம்மை இழுத்துக்கொண்டு போகின்றனவேயொழிய, புத்தியுள்ளதாயும் நம்முடைய சம்க்ஞைகளை அறிந்து நம்முத்திரவுப்படி நடக்கக்கூடியதுமான உயிர்ப்பிராணிகளல்ல. ரயிலில் போகையில் பல்துலக்க ஒரு குச்சி ஒடிக்கவேண்டுமென்றால் கீழே இறங்கமுடியுமா? ஒரு

கோவில் குளங்களை இறங்கிப்பார்க்க வேண்டுமென்றால் சாவகாச முண்டா? குளித்து முழுகி சாப்பிட வேண்டுமென்றால் நாம் திரும்பி வரும்வரையில் ரயில் காத்துக்கொண்டிருக்குமா? குதிரைவண்டியிலோ வென்றால் "மணி பத்தாகிவிட்டது, பசிக்கிறது" என்று சொன்னவுடனே வண்டிக்காரன் கடிவாளத்தை ஒரு உலுக்கு உலுக்கி "சல்ஜாவ்" என்று சொன்னால் குதிரை பாச்சலில் கிளம்பிவிடும். நாராயணசாமி அய்யர் வீட்டுச்சமையலை நினைத்தவுடனே வண்டியிலிருப்பவர்களுக்குப் பசியுண்டாக அந்தப்பசி வண்டிக்காரனிடம் போய் அவன் கையிலிருந்து கடிவாளத்தின் வழியாய் குதிரைக்கும பரவ அக்குதிரை சிவந்தகண்ணும் திறந்த மூக்கும் பரந்த காலுமாகக் கிளம்பிவிடுகிறது. வீடுபோய்ச் சேர்ந்ததும் குதிரையின் வியர்வையைத் துடைத்து அதைத்தட்டிக்கொடுத்தால் அது வண்டிக்காரனைக் கண்குளிரப் பார்த்து சந்தோஷத்தினால் கனைக்கிறது. இம்மாதிரியாக பத்துமைலுக் கப்பால் ஒரு வீட்டில் செய்யப்படும் சமையலுடைய வாஸனை தபால் வண்டிக்குதிரையின் குளம்பு நுனிவரையில் பரவுகிறது. ரயில்வண்டியிலோவென்றால், சாப்பாடுபோனால் போகட்டுமென்றாலும், ஸ்ரீரங்கத்தில் தாசி ரங்கம்மாள் பாட்டுக்கச்சேரி 8-மணிக்கு ஆரம்பம், இப்பொழுதோ மணி ஆகி விட்டதென்றால், அதன் நீராவியந்திரத்தில் ஜலம் ஒரு கொதி அதிகமாகக் கொதிக்குமா? ஒரு குமிழி அதிகமாக உண்டாகுமா? கால் மைல் அதிகவேகமாகப் போகுமா? எப்படியோ தப்பித்தவறி பாட்டுக் கச்சேரிக்கு சரியான காலத்தில் வந்து சேர்ந்தாலும், யாரைத்தட்டிக்கொடுக்கிறது? ரயில்வண்டிக்கதவைத்தான் தட்டிக்கொடுக்கவேண்டும். அல்லது வண்டி ஒட்டுகிற சட்டைக்காரனைத்தட்டிக்கொடுக்கலாம். ஆனால் அவன் திருப்பிக்கொண்டு நம்மைத் தட்டிக்கொடுக்காமலிருக்கவேண்டும். ஆதலால் குதிரைவண்டியின் பெருமை என்னவென்றால் மனிதன் தன்னுடைய சிற்றுடலில் அடங்கி நிற்காமல், இன்னொரு ஜீவஜந்துவின் உடலில் புகுந்து அதையும் அதனுடன் வண்டி, வண்டியிலுள்ள ஜனங்கள், ஜனங்களுடைய மூட்டை முடிச்சுகள் எல்லாவற்றையும் (பதார்த்தமாக) ஆட்டிவைக்கிறான்.

மூன்றாவது, இந்த நாளில் ரயிலில் பள்ளிக்கூடம்போகும் பிள்ளைகள், குளிர் வெயில் தாங்க சக்தியற்றவர்களாய் ரயிலில்சாய்ந்துகொள்ள திண்டுதலையணைகள் வேண்டுமென்றும், குளிர், மழை இவைகளைத் தடுப்பதற்கு கதவைச் சாற்றவேண்டுமென்றும் சொல்லிக்கொண்டு கஷ்டங்களை எதிர்த்துப்போராடும் சக்தியை இழந்து விடுகிறார்கள். தபால்வண்டிக்குள் கை கால்களை தாராளமாய் நீட்டவும் முடக்கவும் இடமில்லாமையாலும், வண்டிக்கு வெளியில் முன்பெட்டியில் பனியும்குளிரும் அடிப்பதனாலும், உணர்வற்றுப்போன கை கால்களில், வண்டியைவிட்டுக்கீழே இறங்கின பிறகாவது, வெயில் கிளம்பினபிறகாவது உணர்வு கொஞ்சங்கொஞ்சமாய்த் திரும்பி வருகிற சுகத்தை இந்த நாளைப் பிள்ளைகள் அறிவார்களா? எல்லாவற்றிற்கும் மேலாக எவ்வளவு கஷ்டங்களிருந்தபோதிலும் வாய்திறவாமல் பொறுத்துக்கொண்டிருக்கிற சக்தியையும் அதின் பெருமையையும் இவர்கள் எங்கே அறியப்போகிறார்கள்? அல்லது திருடர்கள் வந்தால் அவர்களைச் சுடக்கூடிய அதிகாரமும், அவ்வதிகாரத்தின் பெருமையும் ரயிலுக்கேது? நான்காவது, சூரியோதய சந்திரோதயங்களின் அழகையும், வழியில் காணப்படும் விநோதக் காக்ஷிகளையும் வேகமாய்ப் போகும் வண்டியின்மேலிருந்து பார்த்தால் தான் அவைகளின் முழு அழகும் வெளிப்படும். மேலும் குதிரையின் குளம்புகள், லகு, மிசிர, திசிர ஜாதிகளில் தாளம்போட, வண்டிக்காரனுடைய ஊதுகொம்பு வாத்தியத்தை சுருதியாகவும், குதிரையின் சலங்கைகளைப் பக்கவாத்தியமாகவும் வைத்துக்கொண்டு பக்ஷியினங்களுடைய பாட்டைக்கேட்கவேண்டுமானால் தபால்வண்டியில் பிரயாணம் செய்தாலொழிய வேறு வழியில்லை.

ஐந்தாவது இதரவண்டிகளோடு போட்டி போட்டுப் பந்தயம் ஜயிக்கிறஆநந்தத்தை ரயில்வண்டியில் எப்படி அறியமுடியும்? அது குதிரை அல்லது மாட்டுவண்டிகளுக்கே உரியது.

சில பள்ளிக்கூடத்துப் பிள்ளைகளும் மூத்தோர்களும் வண்டிக்கு முன்புறத்தில் பெட்டியில் உட்காருவது அபாயகரமென்று பயந்துகொண்டிருந்தார்கள். ஆனால் நான் மட்

டும் எப்போதும் பெட்டியின்மேல் தான்உட்கார இஷ்டப்படுவேன். கூண்டிலடைபட்டதுபோல் கைகால்களை நீட்ட முடியாமல் வெளியில் நடப்பதைப் பார்க்கமுடியாமல் உள்ளே உட்கார்ந்து புழுங்கிக்கொண்டிருப்பதைக்காட்டிலும் வெளியே யாதொரு நிர்ப்பந்தமுமில்லாமல் உன்னதஸ்தானத்தில் உட்கார்ந்து காற்றுவாங்கிக்கொண்டும், குதிரைகளின் முதுகினழகையும் நடையழகையும் கண்கொட்டாமல் பார்த்துக்கொண்டும், இடையிடையே நாமே கடிவாளத்தைப் பிடித்து சாரத்தியஞ்செய்துகொண்டும் போவது எவ்வளவோ மேலானதல்லவா? அப்பேர்ப்பட்ட ஆசனத்துக்காக அதிக வாடகைகேட்டாலும்கொடுக்க எனக்கு சம்மதந்தான். அதிலுட்காருவது அபாயமென்று பயப்படக்காரணமேயில்லை. தன் ஜாதகத்தைப்பார்த்து அதன்படி சம்பவிக்கக்கூடிய ஏதாவதொரு பிராணாபத்திலிருந்து தப்பித்துக்கொள்ளப் பிரயத்தனப்படுகிறவன் "நான் எங்கே ஒளிந்துகொள்ளட்டு"மென்று என்னைக்கேட்பானாகில் "அப்பா, வேறெங்கும்போகாதே, பத்து ரூபாயைக் கையிலெடுத்துக்கொண்டு தினம் ஒரு ரூபாயாக செலவழித்துத் தபால் வண்டியின் முன்பெட்டிக்கு சீட்டுவாங்கிக்கொள்; வண்டியைவிட்டிறங்காமல் பிரயாணஞ்செய்துகொண்டிரு. பத்துநாளைக்குள் உன்கெட்டகாலம் நீங்கி நல்லகாலம் வந்துவிடலாம். போதாவிட்டால் இன்னொரு பத்துரூபாய் அப்புறம் வேண்டுமானால் செலவழிக்கலாம். வீணாக வைத்தியனுக்கும் வக்கீலுக்கும் காசுகொடுக்காதே" என்று புத்திமதிசொல்வேன். எவ்விதமான ஆபத்தாயிருந்தாலும் தபால் வண்டியைப்போல் அவ்வளவு பத்திரமான இடம் உலகத்திலேயே இல்லை. சிறைச்சாலையில் போய் ஒளிந்துகொண்டாலும், பழையகுற்றமிருக்கையிலேயே புதியகுற்றம் ஏற்பட்டால் கைதியைப்புனர் விசாரணைக்குக் கொண்டுவரலாமென்று சட்டமிருக்கிறது. மேலும் சிறைச்சாலையில் வேலைசெய்து சாப்பிடவேண்டும். அல்லது வியாதிக்காகப்பயந்து வைத்திய சாலைகளில் போய்ப் படுத்துக்கொண்டாலோ, வைத்தியர்கள் மகாகோரமான மருந்துகளைக்கொடுத்துச் சற்றுப்பின்னால்போகிற பிராணனை முன்னாலேயே அனுப்பிவிடுகிறார்கள். அல்லது சென்னப்பட்டணம் பொருட்காட்சி சாலையில் மான் மயில்களோடு கூண்டிலடைபட்டிருப்போமென்றாலோ, பார்க்கவருகிறவர்களெல்லாம் நம்மேல் கல்லைவிட்டெறிந்து வேடிக்கை பார்ப்பார்கள். தபால் வண்டியிலோ இப்பேர்ப்பட்ட ஆபத்துகளொன்றுமில்லை. நம்மைப் பிடிப்பதற்காக பிடிவாரண்டு ஜப்திவாரண்டு முதலிய சர்க்கார் படாடோபங்களோடு கடன்காரர்கள் நம்மைத் துரத்திக்கொண்டு வந்தாலும் பிடிக்கமுடியாது. சர்க்கார் தபால்வண்டியை நிறுத்தப் போலீஸ் உத்தியோகஸ்தர்களுக்குக்கூட அதிகாரமில்லை. சர்க்கார் உத்தியோகஸ்தனைத் தன் வேலையைச் செய்யவொட்டாமல் தடுப்பது இந்திய பினல்கோட் 253-வது பிரிவுப்படி மூன்று வருஷங்கடுங்காவல் விதிக்கக்கூடிய குற்றம். அப்படியே யாராவது நம்மைத்துரத்தினாலும் குதிரையின் காதிலொரு சவுக்குக்கொடுத்தால் (அந்தச் சவுக்கு நம்மைத்தடுக்கும் போலீஸ்காரன்மேல் தவறிப்போய் விழுந்தாலும் பாதகமில்லை) ஒரேமூச்சில் யமலோகத்தில் கொண்டுபோய் விட்டுவிடும். அங்கே நம்மையாரும் தொடரமுடியாதென்பது எல்லோருக்குந் தெரிந்த விஷயம். வியாதி வருமென்று பயந்தோமானால், தபால் வண்டியின் ஓட்டத்தினால் நம் ரத்த ஓட்டமும் அதிகரித்து நல்ல காற்றை உட்கொள்ளுவதினால் ரத்தம் சுத்தியாகி, நம்மைத்தொடர்ந்த வியாதி பறந்துபோம்.

——.(*):——

## ஏகாந்த ராமய்யர்.

பம்பாய் ராஜதானியைச்சேர்ந்த தார்வார் (Dharwar) ஜில்லா கோட் (Kod) தாலூக்காவில் அப்லூர் (Ablur) என்றோர் கிராமமிருக்கிறது. அக்கிராமத்துள் சோமநாதஸ்வாமி கோவில் பிராகாரத்தின்மீது ஓர் சாஸனம் வரைந்துள்ளது. இது, ஏகாந்தராமய்யர் என்னும் வீரசைவர் தம் சிவபக்தியால் ஈசுவரனை யுகப்பித்து, அவர்வரப்பிரசாதம் பெற்று ஜைனருடன் வாது புரிந்து, அவர்கள் கோயிலொன்றை பந்தயத்தில் ஜயித்து, அதிலுள்ள ஜினவிக்கிரகத்தை உடைத்தெறிந்து, சிவலிங்கஸ்தாபனஞ்செய்த விஷயத்தை விஸ்தாரமாய் கன்னடபாஷையில் மிக இனிய உரையிடையிட்ட செய்யுளால் அமைக்கப்பட்டிருக்கிறது. என்னாலியன்றமட்டும் இச்சாஸனத்தின்னடையை அனுசரித்து தமிழுக்கிணங்க மொழிபெயர்த்தடியில் பதிப்பித்திருக்கிறேன்.

மேற்கூறிய ராமய்யர்காலம், சாஸனங்களிற் சொல்லப்பட்ட விஜ்ஜலரசன், சோமேசுவரன், காமதேவன் முதலிய வரசர்களிருந்த காலமாகவேண்டும். அதாவது, உத்தேசம் கி. பி. 1200-க்குப் பிற்படாது; கொஞ்சம் முற்படினும்படும். இக்காலத்திற்குப் பிறகுதான் வீரசைவாசாரியார்களாகிய வசவர், சென்னவசவர்களும் தம் மதத்தைப்பரவச்செய்தார்கள்.

## ஏகாந்தராமய்யர்.

கடல் சூழ்ந்த இச்சம்பூத்தீபத்தின் தென்பால் நீல நிஷத ஹிமவந்த பர்வதாதிகளுள், கீழ்மேல் சமுத்திரங்கள் பரியந்தம் நீண்டு, குளிர்ந்த நிலவெரியப் பெற்றது இமாசலம். இவ்விமயமலையின் தக்ஷிண[1] பார்சத்திலமர்ந்துள்ள பாரதவர்ஷத்தில், குந்தள தேசமென்பது அதிசோபையுடன் விளங்காநின்றது. இத்தேசத்தில் ஆலந்தை யென்னும் நகரமானது விபுதஜனங்களாலும்,[2] அகணித[3] தனதான்னிய ஜலசமர்த்தியாலும், அமராவதியிலும் மிக்கபுகழும் அழகும் பெற்றோங்கி விளங்கியது. பின்னும், அமராவதியில் சுகேசி,[4] மஞ்சுகோஷை[5] என்னுமிரு கந்தர்வஸ்திரீக்களுளரேயெனில், ஆலந்தையிலே பெண்பாலரெல்லாரும் சுகேசியராயும்,[6] மஞ்சுகோஷையராயுமிராநின்றனர்.[7] அந்நகரம், நாநாவித செஞ்சாலிவனங்களாலும்,[8] பூர்ணதடாக கூப ஸரஸ்ஸுகளாலும், இசைபாடுந் தேனீக்கள், மயில், குயில், கிளி முதலிய பக்ஷிஜாதிகளின் நாதங்களாலும், கணிகையர் விநோதமாய் எழுப்பும் வீணையின் ஒலியாலும் நிறைந்து பொலிந்து தோன்றியது. அவ்வாறு அபரிமிதகேதார[9] பூமியும், அபாரஜலாபூர்ய[10] அபிராமமும், பஹுஜன அகீர்ண்ணமும்,[11] அமேய கணிகாநிவாஸமும், அகணிதவணிகஜன ஆச்ரயமும்[12] என்னப்பட்ட சோபைகட்கு[13] நிவாஸமாயிராநிற்ப, தேவகணங்களின் முடிகளிலுள்ள இரத்தனங்களின் சுடர்களால் பிரகாசியாநின்ற பாதாரவிந்தங்களையுடைய சோமநாதர், வெள்ளியங்கிரியினின்றும் கிரிஜையொடு[14] எழுந்தருளி தமக்கிருப்பிடமாய் வீற்றிருந்தார். அந்த சோமநாதரமர்ந்துள்ள ஆலந்தையில் வியாச, சுக, வாமதேவ, பாராசர, கபிலாதியர்க்கு சதுர்சமாய்[15] விளங்காநின்ற விப்பிரர்கள்[16] வாசஞ்செய்யும் அக்கிரகாரத்தில், ஸ்ரீவத்ஸகோத்திரத்தான், பூசுரர்களால் வந்திக்கப்பட்டவன், நிகில வேத வேதாங்கவிதன்,[17] பாவனசரித்திர குணஸத்பவன்[18] புருஷோத்தமனென்பானோர் பிராம்மணனிருந்தான். அவ்விப்பிரனுக்கு சீதாதேவி அருந்ததிமுதலிய சதி[19]கட்கிணையாயும், குணசம்பன்னையாயும், பாவனஸுசரிதையாயும்,[20] பதிவிரதையாயும் பத்மாம்பிகை யென்னும் மனைவியிருந்தாள். அத்தம்பதிகள் பலகாலம் மக்கட்பேறில்லாமல் இருந்து ஒருநாள் "ஆபுத்ரஸ்யலோகோஸ்தி"[21] என்னும் வேதவாக்கியத்தை நினைந்து புத்திரார்த்தமாய் ஸத்திய பவித்திர ஆசாரணங்களை அனுசரித்து, புருஷோத்தமன், ஆபதாரணன்[22] ஈசனென்று, களத்திர ஸஹிதமாய்[23] சம்புவைபூசித்தான். அப்பொழுது, தேவ தைத்தியர்களால் வந்திக்கப்பட்ட பாதாரவிந்தங்களையுடைய மஹேசுவரர் கைலாசபர்வதத்து ரம்யபூமியுள் கேசவ, வாஸவாப்ஜபவர்[24] முதலான அஸங்க்ய[25] கணங்கள் சூழ சுகாஸனராய் ஓலக்கம்[25a] செய்யாநிற்க, "ஒஹில, தாஸ, சென்ன, சீராள, ஹலாயுத, பாண, உத்பட, மலயேசுவர, கேசவராஜாதியான பல்கணத்தார் பூலோகந்துறந்து இவ்விடத்து பக்திதுரந்தராயிருப்ப, மண்ணுலகம் ஜைனபௌத்த ஜனங்களால் அல்லலுற்றது"[26] என்று நாரதனெனும் கணேசுவரர் விண்ணப்பஞ் செய்வாரானார். இதைக்கேட்ட மஹேசுவரர் முறுவலித்து,[27] வீரபத்திரரை நோக்கி, "நீர் மனுஷ்யலோகத்தில் நும்பல அம்சங்களிலொன்றைப் பிறப்பித்துப்புறச்சமயங்களை நிராகரியும்" என்று கட்டளையிட, புருஷோத்தம பட்டர்க்கு சொப்பனத்துள் தாபசீ ரூபத்துடன் வீரபத்திரர் தோன்றி, "பரசமய நியாமகனான புத்திரனொருவன் உமக்குப் பிறப்பான்" என்றும்.

ஜைநமார்க்கேஷு யே யாதா பஹவோ
தக்ஷிணாபதே | தூஷிதாபவது ஸர்வ்வே
ராமேண தவ ஸூநுநா || [28]

என்றும் பரமபிரசாதஞ்செய்து போனதும் புருஷோத்தமபட்டர் கிருதார்த்தராகி சந்தோஷமடைந்து மகனைப்படைத்து, ஜாதகர்ம்மாதிகிரியைகளைச்செய்து, தேவதோத்தேசத்தால் ராமன் என்னும் பெயரையிட்டார். ராமய்யர், தம்திவ்வியபிறப்புக்கேற்ப சிவயோகத்தால் சிவனை ஏகாந்தத்தில் ஆராதித்து **ஏகாந்தராமய்யர்** என்று புகழப்பெற்றார். நாடோறும் சிவாகமோக்தமாய் பற்பல க்ஷேத்திரங்

(1) பக்கம்; (2) கற்றுணர்ந்தோர். (3) எண்ணிறந்த; (4-6) நல்லகூந்தலையுடையவள் (5-7). இனியமொழியையுடையவள்; (8) செந்நெல்; (9) நஞ்சைபூமி. (10) குளங்களினால் அழகாக்கப்பட்ட (11) நெருக்கம். (12) இருப்பிடம். (13) இருப்பிடம்; (14) மலையரையன், மகளானபார்வதி. (15) சமானமான: (16) பிராமணர்கள். (17) வேதாங்கங்களறிபவன்; (18) தூய்மையான நன்னடையுடையவள்: (19) பதிவிரதை. (20) தூய்மையான நடத்தையுடையவள். (21) ஓர் வேதவாக்கியம். (22) ஆபத்தினின்றுங்காப்பான். (23) பெண்டாட்டியுடன் கூட. (24) இந்திரன் பிரம்மா. (25) எண்ணிறந்த. (25a) சபை. (26) துயரமடைந்து. (27) சிரித்து. (28) தென்தேசத்தில் ஜைனமார்க்கத்தைத்தழுவியிராநின்ற அநேகர்கள், உன்மகன்ராமனால் அவமதிக்கப்படுவார்களாக.

ளில் சாம்பவமூர்த்தியை தரிசித்தும், எண்ணிறந்த தீர்த்தங்களில் ஸ்நானமாடியும், பார்வதீசன் பாத கமலங்களை, மனோவாக்குக்காயங்களடங்க சிந்தித்து ஒழுகுவார், சுரார்ச்சிதமாயும்,[29] பாபஹாரியுமாயம் விளங்காநின்ற தக்ஷிண சோம்நாதனை பிரீதியோடும் கண்டார். அமரர்களின் மௌலிமணிகிரணங்களால் ஒளிரும் பாதாப்ஜங்களையுடைய, புலிக்கரை க்ஷேத்திரத்தெழுந்தருளிய சோமநாதரை முறைமையில் தொழுது வருநாள், பிரமேசுவரர் பிரத்தியக்ஷராகி,

> அப்பளூர் வரக்ராமம் கத்வா மமாஞ்ஞயா |
> தத்ரவாஸம் குரு ஸ்வஸ்தம் பஜ மாம் பக்தி யோகத: ||
> ஜைநை: ஸஹவிவாதம்ச சங்காம் ஹித்வா குருஷ்வத: |
> ஸ்வசிரோபி பணம் க்ருத்வா புத்ர த்வம் விஜயீபவ ||[30]

என்று பிரசாதஞ்செய்யக்கேட்டு, ராமய்யர்உடனே அப்பளூருக்குச்சென்று, அவ்வூர் பிரம்மேசுவரர் சன்னிதியில் ஆழ்ந்தபக்தியுடன் ஆராதித்துவரத்தலைப்பட்டார். அப்பொழுது ஒருநாள், அவ்வூர்த்தலைவனாகிய சங்ககவுண்டனும், மற்றுப்பலஜைனரும் ஒன்றுகூடி பிரம்மேசுவரர் கோயிலிற்புக்கு, இடைவிடாது, ஜினன்சர்வோத்தமனென்று கூறி, ஜினநாமசங்கீர்த்தனஞ்செய்தார்கள். அதனைக்கேட்ட ஏகாந்தராமய்யர் அதிகுபிதராய்[31] சிவசன்னிதியில் அந்நியதேவதாஸ்தவம்[32] செய்தல் தகாது என்று சொல்லியும், ஜைனர்களதை மதியாது ஜினபஜனை செய்து கொண்டிருந்தார்கள். ராமய்யர் மறுபடியும் ஹிதோபதேசம் செய்வார்:— “ஜகத்கர்த்தாயாவனோ அவன், யாவன்தனை ஆபத்காலத்தில் காப்போன் அவன், தனக்கு மிக்க கோபந்தோன்றுங்கால் சம்ஹரிப்பவன் யாவனோ அவன், சம்புவே, இச்சர்வாந்தர்யாமியாயிருக்க, அகஸ்மாத்தாய் பூமியில் ஜனனம் பண்ணி, சம்சாரத்தில் சிக்கிக்கிடந்து, பிறகு தவம்புரிந்து சுகம் பொருந்தியிருப்பவனான ஜினனும் ஓர் தேவனோ? ஹரனைப்போல நம்அருகன் வரப்பிரசாதியாவனோ? இவ்ஹரனிடமிருந்து பழையகாலத்தில் பாணன், தினிசாலன் முதலியோர் வரம் பெற்றுள்ளார்” என்றார்.

இதைச் செவியுற்ற ஜைனர்கள், “நீர்முன்னாள் இதம் பெற்றோர்கதைகளை எடுத்தோதுவது எதற்காக? இப்பொழுது, நீர் உம் சிரத்தை ஜனங்களறிய அரிந்து அன்னோனாகிய ஹரனுக்குச்சமர்ப்பித்து, மறுபடியும் அவனிடமிருந்து உயிர்பெற்றெழுவீரேல், நீர்தான்பக்தர், உம்ஹரனே தேவன்” என, ஏகாந்தராமய்யர், “மனவிஜரிபுவாகிய[33] ஈசனுக்கு என்தலையை ஈந்து, மீண்டுமதைப்பெறின், நீவிர் எனக்கு ஈயும் பணயம்[34] யாது? “என்று கேட்டார். ஜைன “ஜினனைப்பிடுங்கி எரிந்து சிவனைப்பிரதிட்டிப்போம்” என்று கூறினர். என்றலும், “கொடுமின் இப்படிக்குப்பணையவோலை நீவிரிப்பொழுதே’ என்று ராமய்யர் வற்புறுத்த, ஜைனர்களும் இசைந்து எழுதிக்கொடுத்தார்கள். அதைப்பெற்று, தாம் நின்றவிடத்திலேயே தலையறுப்பான் உத்தேசித்து, சிவபிரானை நினைந்து, ‘ஹே! சாம்பமூர்த்தே! என்றேனு நான் ‘நின்னையல்லால் சரணில்லை’ என்னாதிருப்பேனேலன்றோ இத்தலையறுபடமயங்கும்; அப்படியன்றி ‘உன்னையன்றிப்புகலிடமில்லை’ என்னும் என்றலை அற்று நின்பதாப்ஜங்களில் படும்வண்ணம் உருளட்டும்” என்றுதியானித்து சிவநாமத்தை உரக்கக்கூறிக்கொண்டு, வீரபக்தராகிய ராமய்யர், சிரத்தை சிவபாதார்ப்பணஞ்செய்ய மெல்ல அறுக்கத்தொடங்கலும், ஜைனர்கள், “ஆ! இவன் ஏதோ வாளால்கொஞ்சமாய்க்கீறிக்கொள்ளுகிறான், வாளையுருவியபோது சூரத்தனஞ்செய்ய நினைந்தனனேயொழிய, பின்பு பயம்பிடித்து தேகத்துக்குக் கெடுதிவாராமலிருக்க முயல்கின்றான். இவன் தொழில் வாளுக்குக்கேடேயொழிய வேறில்லை,” என்று ஏசினர். இம்மாற்றஞ்செவிமடுத்ததும், வீரராமய்யர், முதிர்ந்த பயிர்க்கற்றையைக் கொய்பவன்போல எளிதில்தம்தலையை வெட்டி தம்மையாளுடையஈசன் திருவடிகளிலிட்டு சங்கரகணங்கள் மனங்களிக்கச்செய்தார்.

அரிந்த தலை எழுநாள்வரை வைத்திருந்து, ராமய்யர் உலகமறிய ஹரன் ஆதரவால் வடுவின்றிப் பொருந்தப்பெற்றார். அப்பொழுது ஜைனரெல்லோரும் விரைந்துவந்து, “நம்ஜினனை யழிக்காது காத்தருளவேண்டுமய்ய!” என்று அய்யர் தாள்களைப்பிடிக்கவும், மதியாராகி, இடியேறுபோன்று நொடியளவில் ஜினன்முடிபொடிபடத்தாக்கினர். காட்டானை கதலித்தோட்டத்தில் புக்கவண்ணம், தாம் ஒருவரேயாயினுமஞ்சாது, விரைவில், கோயிலைக்காக்கும் வீரர்களையும், சதுரங்கசேனைகளையும், சாமந்தர்களையும் துரத்தியடிக்க, அவர்களும் “ஜைனர்கட்கோர் மகாமாரிவந்துற்ற” தென்றஞ்சியோடத் தலைப்பட்டனர்: இவர்களெல்லோரும் ஓடிடவே அய்யர் வசதியில்[35] புக்கு ஜினவிக்கிரகத்தின் சிரமி

(29) தேவர்களால் பூஜிக்கப்பட்டதாயும். (30) என்னுடைய ஆஞ்ஞைப்படி அப்பளூர் என்னும் சிரேஷ்ட கிராமத்துக்குச்சென்று அவ்விடத்துஸ்வஸ்தமாய் வாசஞ்செய்வாயாக; என்னை பக்தியோகத்தால் பூசைசெய்வாயாக. ஜைனர்களுடன்கூட, பயப்படாமல், வாதச்செய்வாயாக உன்தலையை பந்தயம் வைத்தாகிலும், என்னருமைப்புதல்வனே, ஜயமடைவாயாக.’ (31) மிகவும் கோபமடைந்தவராய். (32) வேற்று தெய்வங்களைபுகழ்தல். (33) மன்மதனை அழித்த சிவன். (34) பந்தயம். (35) ஜைனர் கோயில். இதில் அவர்கள் தெய்வங்களாகிய தீர்த்தங்கரர்களின் உருவம், முண்டிதீததலையினராய் நீண்டதொள்ளைக்காதுடையவர்களாய், பத்மாஸனராய், இருகரங்களையும் மடியில் வைத்தவர்களாய், நிர்வாணிகளாய்ச்செய்வித்து பிரதிஷ்டித்திருக்கும்.

ழியுந்தலையும் அடித்து முறித்தார். சோமேசரும் தம்பக்தனை கைகொடுத்துப் பாலித்தார்.

களச்சூரி வம்சவாரிதியிற்றோன்றிவிளங்காநின்ற விஜ்ஜலமஹிபாலனிடம் ஜைனர்கள் சென்று நடந்தவைகட்கு முற்றும் விரோதமான விருத்தாந்தங்களைச்சொல்லி, அவனுக்குக்கோபமூட்டினர். அரசன் ராமய்யரை நோக்கி "நீயேன் இவ்வநியாயத்தைச்செய்தாய்?" என்றுவெகுண்டுவினவ, ஜைனர் கொடுத்த பணையவோலையை எடுத்து, "அவர்களீந்த ஓலை இதே. நீ அதை நன்றாராய்ந்து பத்திரமாய் உன்பண்டாரத்தேவைப்பாயாக. மறுபடியும் உன்முன் ஜைனர்கள் பணையம்வைப்பாராயின், ஒவ்வொருஜினவிக்கிரகத்துக்கு மொவ்வொருதடவை என்றலையயரிந்து அவர்கள் கையில் கொடுப்பேன். அவர்களதனை சுட்டிடினும், மறுபடியும் நானதனைப் பெறவல்லேன். ஆதலால், ஆனைசஜ்ஜியவசதி முதலாயுள்ள எண்ணூற்றுவசதிகளையும் ஜைனரைக் கொண்டுபணையம்வைப்பி" என மொழிவதைக் கேட்ட விஜ்ஜலராயன், வசதிகளிலுள்ள ஜைனபண்டிதரையும், மற்றசாமான்னியஜைனரையும் கூவி, "நாம் இக்களதுகத்தை[36]க்காண அபேக்ஷிக்கின்றோம் நீங்கள்பணையச்சீட்டெழுதிக்கொடுமின்கள்" என்று வேண்ட, அவர்கள் மனமழுங்கி, "நாங்கள் முன்னாழிந்த வசதியைப்பற்றிமுறையிடவந்தோமேயன்றி ஜைனமதத்தைப்பிரளயமாடவரவில்லை" எனமன்றாடினார்கள். அதைக்கேட்டு அரசன் நக்கு "நீங்கள்மூச்சுவிடாமல் இவ்விடம் விட்டகன்று சுகமே வாழுங்கள்" என்று அவர்களையனுப்பிவிட்டு, ராமய்யரவர்கட்கு உலகமறிய ஜயபத்திரம் கொடுத்தான். களச்சூரி குலகமலமார்த்தாண்டனாகிய ஸ்ரீமது விஜ்ஜலரசன் ராமய்யர் செய்த பரமஸாஹஸத்தையும், நிரதியசயமானபரமேசுவரபக்தியையும் மெச்சி, சோமநாதஸ்வாமி கோயிலின் மாடம், கூடம், பிராகாராதிகளின் ஜீர்ணோத்தாரத்துக்கும், ஸ்வாமியின் அங்காங்கபோக நைவேத்தியங்கட்குமாக, வனவாசி நாட்டு சத்தளிகைக்கூற்றத்து அதிபதியாகிய சட்டரசன் முதலியவர்கள் முன்னிலையில், கோரகாவை என்னுங்கிராமத்தை, ஸ்ரீமது ராமய்யர்கால் களைக்கழுவி, தாராபூர்வகமாகக்கொடுத்துப் பிரதிபாலித்தான்.

சிலகாலமானபின், சோமகுலபிரதீபனானசாளுக்கிய சோமேசுவரன் என்னு மரசன் களச்சூரி விஜ்ஜலதேவனை வென்று சுகமேயாண்டு வருநாளில், தன்னைத்தன் பகைவனாகிய விஜ்ஜலன் மேல் படையெடுத்துச்சென்றுவெல்ல உதவிபுரிந்த பிரம்மய்யனோடு ஒருநாள் சிலயப்பள்ளி யென்னுங்கிராமத்திலிருந்தருளுகையில், தர்ம்மகோஷ்டியொன்றைக்கூட்டி அதில் புராதன நூதன சிவபக்தர்களுடைய குணஸ்தவனஞ்செய்துவருகையில், ஏகாந்தராமய்யர், அப்பளூரிலிருக்கும்போது ஜைனர்களெல்லாருங்கூடிவந்து மகாவிவாதம்செய்து, "நீர் தலையயரிந்து கொண்டு சிவன்கையால் அதனைமறுபடியும் பெறுவீராயின், அப்பொழுதே நாங்கள் ஜினனை உடைத்தெறிந்து சிவனைப்பிரதிட்டை செய்வோம்" என்றெழுதிக்கொடுத்த ஓலையைக்கொண்டு தன்றலையை அறுத்துச்சிவனைப்பூசித்துப்பின் எழுநாள் கழிந்தவ்வாறே அதனைமறுபடியும் உடலோடொன்றப் பெற்றாரென்றும், பின் வீரசோமநாதனென்றோர் மூர்த்தியைப் பிரதிட்டித்துச்சிவாகமோக்தமாய்க் குன்றமன்னதோர் கோயிலாக்கினாரென்றும் கேள்வியுற்றுத்திரிபுவனமல்லனாகிய சோமேசுரதேவரசன் விஸ்மயப்பட்டு[37] அப்பேர்ப்பட்ட மஹானைக் காணவிருப்பங்கொண்டவனாய், அவர்க்கு விஞ்ஞாபன பத்திரம் எழுதிவிடுத்துத்தானும் எதிர்கொண்டு, தன்னரண்மனைக்கு அழைத்துச்சென்று பெரிதும் சத்காரத்தோடு[38] பூசித்து வீரசோமநாத தேவாலயத்து ஜீர்ணோத்தாரம் முதலானவற்றுக்கும், சமஸ்த போகங்கட்கும், சைத்ர, பவித்திர, வசந்தோத்சவாதி பர்வங்களில் அன்னதான, வித்தியாதானங்கட்குமாக, வனவாசிநாட்டு அப்பளூரை தேவதானமாக பரமபக்தியுடன் சமர்ப்பித்தான்.

ஏகாந்தராமய்யர் ஸ்ரீகண்டனுடைய பதாப்ஜங்களை அநாகுலசித்தத்துடன்,[39] சிவசமய விதிப்படி, பூசித்து வருகையில், கதம்பகுலத்தில் மயூரவர்ம்மன்வழித்தோன்றிய காமதேவரசன், பானுகல்நாட்டை துஷ்டநிக்கிரகசிஷ்டபிரதிபாலனம் செய்து ஆண்டுவருபவன், அப்பளூருக்குவந்து, வீரசோமநாததேவரைதரிசித்து, ராமய்யரவர்கள் சிவாகமவிதிப்படிகட்டுவித்தபர்வதோபமானமான கோயிலைக்கண்டு, அவர்செய்தஸாஹஸத்தொழிலை ஸவிஸ்தாரமாய்க், கேட்டுமெச்சி, பானுகல் ராஜதானியில் பிரதானரும் தானும், மதுகையின் மண்டலீகர்சஹிதம் வீற்றிருந்த பரமபக்தியுடன் வீரசோமநாதஸ்வாமிக்கு, பானுகல்நாட்டு புதியநாடுகூற்றத்து முண்டகோட்டின் சமீபத்து யோகேசுவரத்துக்கு வடக்கிலுள்ள மல்லவள்ளி என்னுங்கிராமத்தை, ஸ்வாமிகோயில் ஜீர்ணோத்தாரம், உத்ஸவாதிகளில் அன்னதானம் முதலியவைகட்கென்று, ராமய்யர் பாதத்தில் நீரோட்டிக் கொடுத்து, தர்ம்மத்தை பிரதிபாலித்தான்.

மேற்கூறிய தர்ம்மங்களை பரிபாலிக்குமவர்கள் ஸ்ரீவாரணாசி, பிரயாகை, குருக்ஷேத்திரம், அர்க்கியதீர்த்தம், ஸ்ரீபர்வ்வதாதி புண்ணியக்ஷேத்திரங்களில் ஆயிரம்கபிலைகளை,[40] கோடுகளிலும்[41] குளம்புகளிலும் பொற்கட்டுகளிட்டு, சதுர்வேதபாரகர்களான சத்பிராம்மணர்கட்கு, சூரியகிரகண சந்திரகிரகண, விதிபாத, சங்கிரமணமாதியான புண்ணியகாலங்களில்; விதியுக்தமாய் கொடுத்தபலனையடைவர்கள், இத்தர்ம்மங்களை யழித்தவர்களோவெனின், கங்கைக்கரையிலும், குருக்ஷேத்திரம், பிரயாகையாதியான புண்ணிய க்ஷேத்திரங்களிலும் அக்கபிலைகளையும், பிராம்மணர்களையும் கொன்றவர்களுக்கொப்பாவார் என்பதற்குச் சந்தேகமில்லை யென்பதாகப் பண்டையகாலத்து மனுவாக்கியங்கள் பலவுள.

தி. அ. கோபிநாதராவ்.

(36) வேடிக்கை. (37) ஆச்சரியம். (38) மரியாதையோடு. (39) வருத்தமில்லாதமனதையுடையவனாய். (40) காராம்பசுக்கள். (41) கொம்புகள்.

# A GIRL-SAINT'S VISION & EXPERIENCE OF HOLY MATRIMONY.

## ஆண்டாள் அருளிச்செய்த வாரணமாயிரம்.

மாயவன்தன்னை மணஞ்செய்யக்கண்ட தூயநற்கனவைத் தோழிக்குரைத்தல்.

கலிவிருத்தம்--கலியாணிராகம்—ரூபகதாளம்.

1. வாரணமாயிரம் சூழவலம்செய்து
நாரணன்நம்பி நடக்கின்றானென்றெதிர்
பூரணபொற்குடம்வைத்துப் புறமெங்கும்
தோரணம் நாட்டக் கனாக்கண்டேன் தோழீநான்.

2. நாளைவதுவை மணமென்று நாளிட்டு
பாளைகமுகு பரிசுடைப் பந்தற்கீழ்
கோளரிமாதவன் கோவிந்தனென்பானோர்
காளைபுகுதக்கனாக்கண்டேன் தோழீநான்.

3. இந்திரனுள்ளிட்டதேவர்குழாமெல்லாம்
வந்திருந்தென்னை மகள்பேசி மந்திரத்து
மந்திரக்கோடியுடுத்தி மணமாலை
அந்தரி சூட்டக்கனாக்கண்டேன்தோழீநான்.

4. நால்திசைத்தீர்த்தம் கொணர்ந்து நனிநல்கி
பார்ப்பனச்சிட்டர்கள் பல்லாரெடுத்தேத்தி
பூப்புனைகண்ணிபுனிதனோடென்தன்னை
காப்புநாண்கட்டக்கனாக்கண்டேன்தோழீநான்.

5. கதிரொளிதீபம் கலசமுடனேந்தி
சதிரிளமங்கையர் தாம்வந்தெதிர்கொள்ள
மதுரையார்மன்னனடிநிலைதொட்டெங்கும்
அதிரப்புகுதக்கனாக்கண்டேன்தோழீநான்.

6. மத்தளம்கொட்ட வரிசங்கம் நின்றூத
முத்துடைத்தாமம் நிரைதாழ்ந்தபந்தற்கீழ்
மைத்துனன்நம்பிமதுசூதனன் வந்து என்னை
கைத்தலம்பற்றக்கனாக்கண்டேன் தோழீநான்.

7. வாய்நல்லார் நல்லமறையோதிமந்திரத்தால்
பாசிலைநாணல்படுத்திப்பரிதிவைத்து
காய்சினமாகளிறன்னானென்கைப்பற்றி
தீவலம் செய்யக்கனாக்கண்டேன்தோழீ
[நான்.

8 இம்மைக்குமேழேழ் பிறவிக்கும் பற்றாவான்
நம்மையுடையவன் நராயணன் நம்பி
செம்மையுடையதிருக்கையால் தான்பற்றி
அம்மி மிதிக்கக்கனாக்கண்டேன்தோழீநான்.

9. வரிசிலைவாள்முகத்தென்னைமார்தம்வந்திட்டு
எரிமுகம்பாரித்தென்னைமுன்னேநிறுத்தி
அரிமுகனச்சுதன்கைம்மேலென்கைவைத்து
பொரிமுகந்தட்டக் கனாக்கண்டேன்தோழீ
[நான்.

10. குங்குமமப்பிக்குளிர்சாந்தம் மட்டித்து
மங்கலவீதி வலம்செய்து மணநீர்
அங்கவனோடுமுடன்சென்றங்கானைமேல்
மஞ்சனமாட்டக்கனாக்கண்டேன்தோழீ
[நான்

ஆயனுக்காசத்தான் கண்டகனாவினை
வேயர்புகழ் வில்லி புத்தூர்க்கோன் கோதைசொல்,
தூய தமிழ்மாலை யீரைந்தும் வல்லவர்
ஆயுநன்மக்களைப்பெற்றுமகிழ்வரே.

(ஆண்டாள் திருவடிகளே சரணம்.)

# HAMLET, THE TRANSCENDENTALIST.

(FROM SHAKESPEARE).

# ஹேமசந்திரஸிங் என்னும் ஆத்மவிசாரி.

(ஆங்கிலத்தின் மொழிபெயர்ப்பு.)

*By Sri Rajanayaki.* ஸ்ரீராஜநாயகி.

## ஐந்தாவது அங்கம்.

### காக்ஷி. 2.

இடம்:—அந்தப்புறத்தில் ஒரு அறை.

காலம்—இரவு இரண்டாவது ஜாமம்.

(ஹேமசந்திரஸிங்கும் ராணுவும் வருகிறார்கள்).

ஹேமசந்:—என்சிற்றப்பா, எத்தனை நாளைக்கு இப்படி நாமிருவரும் கலந்து பேசி ஒருமுடிவுக்கு வராமலிருக்கிறது.

ராணு:—முடிவாக இப்பொழுது என்னசெய்ய வேண்டுமென்கிறாய்? நீ தான் சொல்.

ஹேமசந்:—இந்தப்பத்திரத்தில் தாங்கள் கையெழுத்தும் முத்திரையும் போட்டுவிட்டுத்தாங்கள் எங்கேவேண்டுமோ அங்கே போகலாம். எங்கேயாவது பிராயச்சித்தார்த்தமாக க்ஷேத்திரயாத்திரை போக இச்சை இருந்தால் அதற்கு வேண்டிய துணையாட்களும் பரிவாரங்களும் தயாராக ஏற்பாடு செய்துவைத்திருக்கிறேன். இப்பொழுதே இருட்டோடேயாருக்கும் தெரியாமற்புறப்படலாம். எப்படியும் தாங்கள் இந்த ராஜ்யத்தை விட்டு அகன்றுவிடவேண்டியது.

ராணு:—நீ சொல்லுகிறபடி செய்யாவிட்டாலோ?

ஹேமசந்:—தங்களை இங்கேயே கொன்றுவிடத் தயாராயிருக்கின்றேன்.

ராணு:—அதென்ன அவ்வளவு நிச்சியம்? நீதான் என்னைக் கொல்லுகிறாயோ நான் தான் உன்னைக்கொல்லுகிறேனோ? உன்னிடத்திலுள்ள கத்தியும் துப்பாக்கியும் என்னிடத்திலும் இருக்கின்றன. நீ ஏதாவது விஷயம் செய்வாய் என்றே நானும் முன்ஜாக்கிரதையாக ஆயுதபாணியாகவே இருக்கிறேன்.

ஹேமசந்:—எப்படியானாலும் எனக்கு சம்மதமே. என்னுயிரைக்காப்பாற்றுகிற விஷயத்தில் பிறருக்கு இருக்கிற சிரத்தையைக்காட்டிலும் எனக்கு அதிக சிரத்தையில்லை.

ராணு:—ஆனால் என்னைக்கொல்லுகிறதற்குமட்டும் ஏன் இவ்வளவு சிரத்தை எடுத்துக்கொள்கிறாய்?

ஹேமசந்:—நான் தங்களைக்கொல்லவேண்டுமென்று சொல்லவில்லை. தங்களுக்கு இந்த ராஜ்யத்தில் தர்மத்தைக்காப்பாற்ற யோக்கியதையில்லாமற் போய்விட்டபடியால் தாங்கள் இந்த ராஜ்யத்தைவிட்டு அகன்றுவிடவேண்டியது. அவ்வளவுதான்.

ராணு:—எனக்கு யோக்கியதை இல்லை என்று உனக்கெப்படிதெரியும்?

ஹேமசந்:—தாங்கள் ஒப்புக்கொண்டுதான் தெரியும்.

ராணு:—நான் என்ன ஒப்புக்கொண்டேன்? எப்பொழுது ஒப்புக்கொண்டான்?

ஹேமசந்:—தங்களிடத்தில் ஏதோகுற்றமிருக்கிறதென்று. இல்லாவிட்டால் தாங்கள் ஏன் என்னைப்பூனாவுக்கு அனுப்புகிறதாகப்பாசாங்கு செய்து என்னைக்கொன்றுவிட ஏற்பாடு செய்யவேண்டும்? தாங்கள் பூனாராஜசபைக்கு எழுதிய கடிதம் இதோ வைத்திருக்கிறேன். தாங்களே படித்துப் பாருங்கள். தாங்கள் அன்று நாடகத்தின் மத்தியில் எழுந்திருந்துபோன பொழுதே எனக்கு சந்தேகமுண்டு.

ராணு:—நீ புலஸ்தியவர்மாவைக் கொன்றதற்காக உன்னை அப்படி தண்டிக்கயத்தனித்தேன்.

ஹேமசந்:—என்னை அப்படி திருட்டுத்தனமாக தண்டிப்பானேன்? எவனையும் அவனுடைய குற்றத்துக்கேற்றபடி பகிரங்கமாக தண்டிக்க தங்களுக்கு அதிகாரமில்லையா?

ராணு:—உன்னை இந்த ஊரிலேயே தண்டித்தால் ஜனங்கள் உன்பக்ஷமாகக்கலகம் செய்வார்களென்று பயந்தேன்.

ஹேமசந்:—ஜனங்களுக்கு ராஜாவாகிய தங்களிடத்தில் இருப்பதைகாட்டிலும் என்னிடத்தில் விசுவாசம் அதிகமாயிருப்பானேன்? இதனாலேயே தங்களுக்கு ராஜாங்கத்தை வகிக்கயோக்கியதையில்லை என்று ஏற்படவில்லையா? மேலும் சத்தியத்துக்கும் தர்மத்துக்கும் பயப்படாமல் பாமர ஜனங்களிடத்தில் பயப்படுகிறவன் அவர்களுக்குத்தலைவனாக இருக்க எப்படி முடியும்?

ராணு :—இந்த அதிகப்பிரசங்கித்தனமான கேள்விகள் ஒருராஜாவைப்பார்த்துக்கேட்க உனக்கென்ன அதிகாரம்?

ஹேமசந் :—தாங்கள் ராஜாவென்று நான் ஒப்புக்கொள்ளமாட்டேன்.

ராணு :—நீ ஒப்புக்கொண்டு எனக்கு ஆகவேண்டியதென்ன?

ஹேமசந் :—நான் தான் தற்காலம் இந்தாராஜ்யத்தின் பிராஜைகளுடைய கக்ஷியை எடுத்துபேசிகிறவன். நானே அந்தப்பிராஜைகளிலொருவன். இந்த க்ஷணத்தில் தாங்கள் செய்திருக்கும் அக்கிரமங்களையெல்லாம் ஜனங்களிடத்தில் நான் வெளியிட்டுச் சொல்வேனுனல் தங்கள் உயிர் தப்புவது கஷ்டம். அப்படி எல்லாம் செய்யக்கூடாதென்று தான் நான் மரியாதையாய் தங்களைத்தனிமையாகக்கண்டு பேசி ஏற்பாடு செய்யவந்தேன்.

ராணு :—நான் இந்த க்ஷணத்தில் இந்த ஊதுகுழலை ஊதினுல் உடனே என்னுடைய சிப்பாய் காவலாளர்களெல்லாம் என்னுடைய உதவிக்குவருவார்கள்.

ஹேமசந் :—தாங்கள் ஊதினுல் நான் தங்களை இப்படியே குத்திவிடுவது நிச்சயம். அப்புறம் என் கதி ஆகிறபடி ஆகட்டும்.

ராணு :—நல்லது, நான் கையெழுத்துப்போடவேண்டியபத்திரத்தை இங்கே காட்டு, படித்துப்பார்க்கிறேன்.

ஹேமசந் :—இந்தாருங்கள் (என்று பத்திரத்தை நீட்டுகிருன்).

ராணு :—(படிக்கிருன்) "இப்பவும் நமக்கு இந்த ராஜ்யத்தின்பாரம் அதிகசிரமத்தைக்கொடுக்கிறபடியாலும், மேலும் பரலோகசாதனமாக சத்விஷயங்களில் புத்தியைச்செலுத்தவேண்டுமென்கிற அபேக்ஷை ஜனித்திருக்கிறபடியாலும், இந்தாராஜ்யத்தை அதன்பிராஜைகளுடைய அனுமதியின்பேரில் நம்முடைய புத்திரனுகிய ஹேமசந்திரஸிங்குக்காவது தவறினுல் மைத்துனனுகிய பிரதாபஸிங்குக்காவது தத்தம் செய்துவிட்டு நாம் க்ஷேத்திர யாத்திரை புறப்படுகிறேரும் என்கிற விஷயம் நம்முடைய பிராஜைகளுக்கெல்லாம் இதனுல் அறிவிக்கப்படுகிறது என்பதற்கு நம்முடைய கையொப்பமும் இந்த ராஜாங்கமுத்திரையுமே சாக்ஷி. நமது புத்திரனுக்கு புத்தி சுவாதீனமில்லாதிருக்கிற பரியந்தம் பிரதாபஸிங்குக்கே மகுடாபிஷேகம் செய்விக்கவேண்டுமென்பது நம்முடைய சொந்த அபிப்பிராயம்."

இந்தப்பத்திரத்தில் கையெழுத்துப்போட்டுவிட்டு நான் மட்டும் பிரயாணம் புறப்படுகிறதா அல்லது உன்தாயாகிய ராணியையும் அழைத்துப்போகலாமா?

ஹேமசந் :—அது அவளுடைய இஷ்டம்; அவள் வந்தால் அழைத்துப்போங்கள்.

ராணு :—நல்லது, நானொருசங்கதி சொல்லுகிறேன் கேள். அவனுடைய பிதாவை நீ கொன்றதற்காகவும், இன்றைக்கு நீ அவனை ஸ்மசானத்தில் அவமானப்படுத்தினதற்காகவும், லக்ஷ்மணஸிங் உன்பேரில் கர்வம் கட்டிக்கொண்டிருக்கிருன். அதற்காக நாளைக்கு உன்னைத்தன்னேடு கத்திச்சண்டையில் துவந்த்வயுத்தத்திற்கழைக்கப்போகிறதாக என்னிடத்தில் சொன்னுன். நானும் அதில் நீயே ஜயிப்பாய் என்று சொல்லி 50 குதிரைகள் பந்தயம் கட்டி இருக்கிறேன். ஆதலால் நாளையதினம் நீ அவனை ஜயித்த பிறகு நான் நம்முடைய பிரபுக்கள் எல்லோர்முன்பாகவும் இந்தப்பத்திரத்தைப் படித்துக்காட்டிக்கையெழுத்தும் முத்திரையும் போட்டு எனக்குப்பிறகு உனக்கே முடிசூட்டும்படி ஏற்பாடு செய்துவிட்டு புறப்பட்டுப்போகிறேன். இவ்வளவு முக்கியமான விஷயத்தை நாலுபேர்சாக்ஷிகள்முன்பாக நடத்துவதே உத்தமம். நான் திருட்டுத்தனமாய் ஓடிப்போகவேண்டிய அவசியமென்ன? எனக்கு அது சம்மதியில்லை. உன் தாயாகியராணியிடத்திலும் கலந்து பேசி அவளையும் இதற்கு சம்மதிக்கும்படி செய்கிறேன். ஆதலால் நீ இனி இந்தப்பைத்தியக்கார வேஷத்தை விட்டுவிட்டுஒழுங்காயிரு.

ஹேமசந் :—தாங்கள் இந்தாராஜ்யத்தை விட்டு பகிரங்கமாக அகன்றுபோவதில் தங்களுக்கு ஆக்ஷேபனையில்லாவிட்டால் எனக்கு யாதொருஆக்ஷேபனையுமில்லை. நாளையதினம்சாயந்திரத்துக்குள் பிரதாபஸிங்கும் வனசரஸிம்ஹம் என்னும் காட்டுராஜனும் இங்கே வருவார்கள். அவர்கள் முன்பாக தாங்கள் பத்திரத்தில் கையெழுத்துப்போடுவதில் எனக்கு சம்மதமே. நாளையதினம் பொழுதுவிடிந்துவிட்டதென்கிற தைரியத்தின்பேரில் எனக்கு சிறை அல்லது மரணதண்டனை விதித்துத் தாங்கள் தப்பித்துக்கொள்ள யத்தனிக்கும்பக்ஷத்தில் தங்களுக்கு நான் செய்யவேண்டிய மரியாதைகளை அவர்களிருவரும் செய்துவிடுவார்கள்! சந்தேகமில்லை. ஆதலால் யோஜித்துப்பார்த்துச் செய்யுங்கள்.

ராணு :—நான் அப்படியொன்றும் பேச்சுத்தவறமாட்டேன். நம்முடைய ராஜ்யத்தைப் பிரதாபஸிங்குக்கேன் கொடுக்க வேண்டுமென்கிருய்? நீ ஏன் முடிசூட்டிக்கொள்ளக்கூடாது?

ஹேமசந்:—தாங்கள் முடிசூட்டிக்கொண்டதில் எவ்வளவு சுகப்பட்டீர்கள்? தங்கள் அனுபவத்தைச் சற்று ஒளிக்காமல் சொல்லவேண்டும்.

ராணு :—அப்படியா, ராஜ்யபாரத்தில் கஷ்டங்கள் இருந்தபோதிலும், அதற்கு மேலாகவே சுகங்களும், கௌரவங்களும் அதிகாரங்களும் இருக்கின்றன. ஆனுல் ஒரு ஒரு சமயத்தில் "ஏனடா இந்த ராஜ்யத்தை ஒப்புக்கொண்டோமென்று தோன்றினபோதிலும் கடைசியில் விட்டுவிட்டுப்போகவும் மனம் வருகிறதில்லை.

ஹேமசந்:—ஐயா, உங்கள் கஷ்டங்களுக்கு ஒரு நமஸ்காரம் சுகங்களுக்கும் இரண்டு நமஸ்காரம்

எனக்கு இரண்டும் வேண்டாம்.என்னை சும்மாவிட்டு விட்டால்போதும். என்னுடைய குணத்துக்கும் யோக்கியதைக்கும் செய்யப்படாத மரியாதைகௌரவங்கள் என்னுடைய உத்தியோகத்துக்காகச் செய்யப்படுவதில் எனக்கு திர்ப்தியில்லை. என்மனோ ராஜ்யத்தில் அதிகாரம் செலுத்துவதைப்போல் அவ்வளவு ஆனந்தம் எனக்கு வேறொன்றிலுமில்லை. ஆதலால் நான்பழைய பைத்தியக்காரனாகவே இருந்து காலந்தள்ளி விடுகிறேன்.

ராணா:— நல்லது அப்படியே இருக்கட்டும். நான் இப்பொழுது படுக்கைக்குப்போகிறேன் எனக்கு உத்தரவுகொடு (என்று போய்விடுகிறான்).

ஹேமசந்:—இன்றோடு சனி விட்டதென்றிருந்தேன். நாளைக்கும் கொஞ்சம் பாக்கி இருக்கிறதா? நல்லதிருக்கட்டும்.

(ஹரிராஜஸிங்வருகிறான்).

என்ன ஐயா இன்னும் தீர்ந்தபாடில்லை. நாளையதினம் எல்லோர் முன்பாகவும் கைமெழுத்துப் போடுகிறேனென்கிறார். இப்பொழுதே போட்டுவிட்டால் இப்படியே பத்திரத்தைத் தங்கள் மூலமாக பிரதாபஸிங்குக்கு அனுப்பிவிடலா மென்றிருந்தேன். சரிபடவில்லை.

ஹரிராஜ:—அதனாலென்ன? நாளைக்குத்தான் ஆகட்டுமே! நாம் எங்கே ஓடிப்போகிறோம். நல்லது தாங்கள் போய் படுத்துக்கொள்ளுங்கள்.

(இருவரும் போய் விடுகிறார்கள்)

---

## காக்ஷி. 3

{ இடம்:— ரண்மனையைச்சார்ந்தஉத்தியானம்.
{ காலம்:—பிற்பகல்.

(ஹேமசந்திரஸிங்கும் ஹரிராஜஸிங்கும் வருகிறார்கள்.)

ஹரிராஜ:—அது சரிதான் ஆனால் தாங்கள் பூனாவுக்கு வேறு ஸ்ரீமுகம் எழுதி முத்திரை போட்டனுப்பிய விவரம் எனக்கின்னும் செவ்வையாய்ச் சொல்லவில்லையே.

ஹேமசந்:—பைராகிகள் கொண்டுவந்த கடிதத்தைப் படித்துப்பார்த்தீர்களல்லவோ! நாங்கள் திருடர்களைச் சந்தித்ததற்கு முதல் நாள் ராத்திரி எனக்கு என்னவோ தூக்கமே வரவில்லை. கூடாரத்து வாசற்படியில் எழுந்துவந்து உட்கார்ந்தேன். நிலவு பட்டப்பகல் போலிருந்தது என் ஹிருதயத்தில் "வந்த காரியத்தைப்பார், வீண்பொழுது போக்காதே" என்றொரு வாக்கு சொல்லிக்கொண்டேயிருந்தது. என்னை அவர்கள் பூனாவுக்கழைத்துப்போவது பூசாரி காளிகோவிலுக்கு ஆட்டுக்கடாவை அழைத்துப் போவதுபோல் என்மனதுக்குத்தோற்றிற்று. என்னவோ திடீரென்று அவர்கள் வசம் என்சிற்றப்பன் அனுப்பியிருக்கும்கடிதத்தைப் பிரித்துப்பார்க்கவேண்டுமென்று ஒரு யோசனைபிறந்தது. என் அனுபவத்தில் நான் தீரயோசித்துச்செய்யும் காரியங்களைக் காட்டிலும், என்னையறியாமல் திடீரென்று தோன்றும் இச்சையினால் தூண்டப்பட்டுச் செய்யும் காரியங்களே அதிக அநுகூலமாக முடிந்திருக்கின்றன. இதனாலேயே நம்முடைய சங்கல்பத்துக்கு மேற்பட்ட வொருசக்தி நம்முடைய திரிகாணங்கள் வழியாகப் பாய்ந்து அதன் காரியத்தை சாதித்துக்கொண்டு நமக்கும் லாபத்தைச் செய்கிறதென்று ஏற்படவில்லையா? சமுத்திரத்தின் அலைகள் கரடுமுரடான பாறையை வழுவழுப்பான சலவைக்கல்லாக்குவது போல் ஈசுவரசங்கல்பமென்னும் நாம் கண்ணைமூடிக்கொண்டு செய்கிறகர்மங்களெல்லாம் முதலில் எவ்வளவு கரடுமுரடாயிருந்தபோதிலும் காலக்கிரமத்தில் அவைகளின் கோணல்களெல்லாம் நீங்கி பளபளப்பாகி ஈசுவரசங்கல்பத்தையே பிரதிபிம்பிக்கின்றன.

ஹரிராஜ:—வாஸ்தவந்தான்.

ஹேமசந்;—உடனே எழுந்திருந்து சால்வையைப் போர்த்துக்கொண்டு அவர்கள் கூடாரத்துக்குள் நுழைந்தேன். சாயந்திரமெல்லாம் பிரயாணம் செய்சிரமத்தினாலும் குடிமயக்கத்தினாலும் எல்லோரும் குறட்டைவிட்டுத்தூங்கினார்கள். அவர்கள் கொண்டுவந்திருக்கும்தபால்பெட்டியைத்தேடிப்பிடித்தேன். என் சட்டைப்பையில் என் தகப்பனாருடையதங் முத்திரைமோதிரமும் புலிநகத்தில் வேலைசெய்துகக்கட்டுக்கட்டிய ஒரு சிறு பேனாக்கத்தியும் பழைய பித்தளைச்சாவியும்கிடந்தது. அதையெடுத்துஒவ்வொரு சாவியாலும் அந்தந்தபால் பெட்டியைத்திறக்கப் பார்த்தேன் நல்லவேளையாய் ஒருசாவி அதற்குசரியாயிருந்தது. பெட்டியை அப்படியே தூக்கிக்கொண்டு ஓசைப்படாமல் என் கூடாரத்துக்கு வந்து அதைத்திறந்து விளக்கேற்றிப் பூனாசபைக்கு எழுதியிருந்த கடிதத்தைப்பிரித்துப் படித்தேன். ஐயா, சொன்னால்நம்புவார்களா? இவ்வளவு திருட்டுத்தனம் இந்த அரசனிடத்திருக்குமா ?—என்னைக்கொல்லுகிறதற்கு என்ன என்ன காரணமெல்லாம் சொல்லியிருந்தது தெரியுமா? ராஜபுத்திரர்களுக்கும் மகாராஷ்டிரர்களுக்கும் உள்ள சிநேகம் நீடித்திருக்கவேண்டியதற்காகவும், இருவருடைய க்ஷேமத்திற்காகவும் இந்தியாவின் க்ஷேமத்திற்காகவும் உலகத்தின்க்ஷேமத்திற்காகவும், மாதம் மும்மாரி பெய்யும் பொருட்டும், நதிகளில் ஜலம் வரளாமல் ஓடும்பொருட்டும் சூரிய சந்திரநக்ஷத்திரங்களுக்கெல்லாம் கிரஹணமுண்டாகாமலிருக்கும்பொருட்டும் இன்னும் எவ்வளவோ காரக்களெல்லாம் சொல்லி என்னைக் கடிதம் கண்டதக்ஷணமே துப்பாக்கிக்கு மருந்து போடுமட்டும் கூடதாமதிக்காமல் என்னை உடனே சுட்டுவிடவேண்டியது.

ஹரிராஜ:—என்ன அநியாயம் ஐயா? இப்படியும் உண்டா?

ஹேமசந்:—அந்தக்கடிதத்தைக் கூட இதோ வைத்திருக்கிறேன். தாங்கள் சாவகாசமாய்ப்படித்

துப்பாருங்கள். நான்மேலே என்ன செய்தேன் தெரியுமோ?

ஹரிராஜ:—சொல்லுங்கள்:

ஹேமசந்:—இன்னது செய்கிறதென்று என்புத்தி தீர்மானிக்கிறதற்குள் என்கை வேலை செய்ய ஆரம்பித்துவிட்டது. அப்படியே அந்தக்காகிதத்தின் பின்புறத்திலேயே வேறொரு ஸ்ரீமுகம் தயார் செய்தேன். என்பெட்டியிலிருந்து நல்லகாகிதம் ஒன்றெடுத்து அதில் இத்தப்புது ஸ்ரீமுகத்தை அப்படியே லக்ஷணமான எழுத்தில் நகல் செய்து என்சிற்றப்பன் கையெழுத்தைப்போலவே கையெழுத்தும் போட்டேன்—ஒருராஜ்யத்திற்கு இளவரசனாயிருந்தால் எல்லா வேலையுந்தான் தெரியவேண்டியிருக்கிறது. நான் முன்னெல்லாம் பிறருக்குப்படிக்க முடியாதபடி எழுதினால்தான் பெரியமனுஷியர்களுக்கு லக்ஷணமென்று, என்னெழுத்து நன்றாயிருந்ததைக்கூட வேண்டுமென்றுஅசட்டையாகவும்விகாரமாகவும்செய்துக்கொள்ளப்பிரயத்தனப்பட்டேன். நல்லவேளையாய் என்னால் அவ்வளவு பெரியமனுஷியனாக முடியவில்லை. இந்த சமயத்துக்கு என்னுடைய சுபாவமானகையெழுத்து:உதவிற்று. என்ன எழுதினேன் தெரிமா?

ஹரிராஜ:—என்ன ?

ஹேமசந்:—ராஜபுத்திரர்களும் மகாராஷ்டிரர்களும் ஒரே க்ஷத்திரியதர்மத்தை அனுஷ்டிக்கிறபடியினாலும் அக்கம் பக்கத்து ராஜாக்களாயிருப்பவர்கள் ஒருவருக்கொருவர் உதவி செய்யவேண்டியது கிரமமானபடியினாலும், துஷ்டநிக்கிரக சிஷ்ட பரிபாலனம் அவசியபடியினாலும், மித்திர பேதக்காரர்களை ராஜ்யத்தை விட்டுத்துரத்திவிடவேண்டியபடியினாலும், சோம்பேறிகளைவேலை செய்யக்கட்டாயப்படுத்த வேண்டியபடியினாலும், வேறொரு வேலையும் தெரியாதவர்கள் தேகத்திலுள்ள சக்தியை வீண் செலவு செய்து தங்களையும் பிறரையும் கெடுத்துக்கொள்ளாமலிருக்கும்பொருட்டு பூமியை உழுது பயிரிடுவதே மேலானதொழிலானபடியினாலும்: இப்படி "படியில் நாலும்" மரக்காவில் எட்டுமாக காரணங்களை அடுக்கி, இக்கடிதத்தைப்படித்து முடிப்பதற்குள்ளாக இதைக்கொண்டுவரும் இரண்டு பிரபுக்களையும் இனி ஒருவரையொருவர்பாராதபடி பிரித்துகாட்டுப்பிரதேசமான இரண்டு தனி கிராமங்களுக்கனுப்பி குடிசைகட்டிக்கொண்டு உழுது பயிரிட்டு ஜீவிக்கும்படி செய்யவேண்டியது. இருவருக்கும் ஏதாவது இரண்டு குடியானப்பெண்களைதத்க்ஷணமே விவாகம்செய்து வைக்கவேண்டியது. தவறினால் உதயபுரிக்கும் பூனாவுக்கும் உள்ளசிநேகம் இதோடு அற்றுப்போனதாக வைத்துக்கொள்ளலாம். உடனே பதில் எதிர்பார்க்கிறோம்.

ஹரிராஜ:—(சிரித்துக்கொண்டு) ஆனால் அவர்களைக்கொல்லும்படி சொல்லவில்லையா ?

ஹேமசந்:—நான் எப்பொழுதும் சண்டைலிகளைதர்மக்கூண்டில் பிடித்துத்துரக்கொண்டுபோய் விட்டு விடுகிறதே ஒழியக்கொல்லுகிறதில்லை.

ஹரிராஜ:—அவர்கள் கதை இப்படியா முடிந்தது?

ஹேமசந்:—இதைக்காட்டிலும் இன்னும் என்ன செய்யவேண்டுமென்கிறீர்கள்? அவர்கள் இதற்குத்தானே இத்தனை நாளாய் பாடுபட்டார்கள் ; இந்த அரண்மனையைச்சுற்றி பிரதக்ஷணம் செய்தார்கள். இரண்டு ஆட்டுக்கடாக்களுடைய சண்டையில் குறுக்கே புகுந்து ரத்தத்தைச்சாப்பிடயத்தனிக்கும் நரியின் கதி இப்படித்தானாகும். இந்தமட்டோடு தப்பினதே பெரியலாபமல்லவா ?

ஹரிராஜ:—அப்புறம் கடிதத்திற்கு எப்படி முத்திரை போட்டீர்கள்?

ஹேமசந்:—அதிலும் தெய்வசங்கல்பம் ஒத்துக்கொண்டது பாருங்கள் அந்தக்கொத்துசாவியில் என் தகப்பனாருடைய முத்திரை மோதிரம் இருந்ததல்லவா, அந்த முத்திரையின் அச்சுதான் இப்பொழுது உபயோகித்துவருகிற ராஜாங்கமுத்திரையும். அந்தமோதிரத்தைக்கொண்டேதான் முத்திரையிட்டேன். கடிதத்தை நன்றாய் முன்போலவே மடித்து விலாசம் எழுதிமுத்திரைவைத்து முன்னிருந்தபடியே பெட்டியில் வைத்துப்பூட்டி அவர்கள் கூடாரத்திலிருந்தபடி இருந்த இடத்தில் கொண்டுபோய் வைத்துவிட்டேன் எல்லாம் ஒருநாழிகை வேலைதான். மறுநாள் நான் திருடர்களிடத்தில் கைதியானதுதான் உங்களுக்கு தெரியுமே.

ஹரிராஜ:—இப்பேர்பட்ட ராஜாவின் வார்த்தையில் என்ன நம்பிக்கைக்கு இடமிருக்கிறது:

ஹேமசந்:—இனி நான் இவனைச்சொல்லுகிறதில் தோஷமென்ன? என் பிதாவைக்கொன்றான். என் தாயைக்கற்பழித்தான். என் ராஜ்யத்தைப் பிடுங்கிக்கொண்டான். என் உயிருக்கே இப்பொழுது வழிதேடுகிறான். இனிமேல் எனக்கென்ன யோசனை? நாம் சும்மா இருக்கலாமோ?

ஹரிராஜ:—பூனாவிலிருந்து சீக்கிரம் பதில் வந்துவிடுமே!

ஹேமசந்:—வரட்டுமே! ஒரு மனிதனுடைய மூச்சு எவ்வளவு? பூ! என்று ஊதுகிறதற்குக்காணுமா? நான் எழுதின கடிதத்தைக் காண்பிக்கவிட்டாலும் அவன் எழுதிய கடிதத்தை நான் திருடிவிட்டேன் என்கிறமட்டும் என் சிற்றப்பனிடத்தில் தெரிவித்து விட்டேன்.

ஹரிராஜ:—கடோர்க்கஜசேனன் உக்கிருத்திரப்பிரதாபன் இருவரையும் திரும்பி வரும்படி இன்றைக்கே ஏதாவது மறுவுத்திரவு எழுதிவிடுவரோ !

ஹேமசந்:—இவர் உத்திரவுகளை ஜாக்கிறதையாய்ப்பார்த்துக்கொள்ளும்படி வழியில் ஆள்கள் வைத்திருக்கிறேன். அதற்குள் இன்றைக்கு இவனை இங்கே யார் விடுகிறார்கள் ?

ஹரிராஜ:—இன்று சாயந்திரத்துக்குள் உங்கள் பத்திரத்தில் கையெழுத்துப் போடாவிட்டாலோ?

ஹேமசந்:—நானே அவனை எல்லோர் எதிரிலும் கொன்றுவிட்டு நடந்த சங்கதியைச் சொல்லிவிடுகிறேன். என்னை பஞ்சாயத்தார் தண்டிக்கிறபடி தண்டிக்கட்டும். உங்களுக்கும் பிரதாபஸிங்குக்கும் என் சரித்திரம் முழுவதும் தெரியுமே, நீங்களிருவரும் சாக்ஷி சொல்லலாமல்லவோ! ஆனல் நேற்று சாயந்திரம் லக்ஷ்மணஸிங்கினிடத்தில் நான் கொஞ்சம் படபடப்பாய் பேசிவிட்டேன். அதைப்பற்றி இப்பொழுது வருத்தபடுகிறேன். ஏனெனில் என்னைப்போலவே அவனும் பிதாவை அநியாயமாயிழந்தவன். போதாதற்குத்தங்கையையும் இழந்துவிட்டான். அவனை இன்றைக்கு நான் மன்னிப்புக் கேட்டுக்கொண்டு சமாதானப்படுத்தவேண்டும். ஆனல் அவனும் அவ்வளவு ஆர்ப்பாடம் செய்திருக்க வேண்டியதில்லை. அதற்காகத்தான் நான் கோபித்துக்கொண்டேன்.

ஹரிராஜ:—இதோயாரோ தங்களைத்தேடிக்கொண்டு வருகிருர்கள்.

(ஆஸாரிகன் வருகிருன).

ஆஸாரிகன்:—நமஸ்காரம்! ஆ, அப்படியா, தாங்கள்உதயபுரிக்குத்திரும்பி வந்ததில் எனக்கு மெத்த சந்தோஷமாச்சு சுவாமி!

ஹேமசந்:—மெத்த வந்தனமையா! தங்களுக்கு இந்தத்சட்டாரப்பூச்சியைத் தெரியுமா சுவாமி?

ஹரிராஜ:—தெரியாதே.

ஹேமசந்:—தாங்கள் எவ்விதத்திலும் பாக்கியசாலிதான். இவனைத்தெரிந்துக்கொண்டிருப்பதே தோஷம். இவனுக்கு ஆஸ்தியும் பூமியும் ஏராளமாய்க்கிடக்கிறது. நல்ல செழிப்பான நிலங்கள். ஒவ்வொருதினிசிலும் உயர்ந்த பதார்த்தம் ராஜாவினிடத்தில் செரவேண்டியபடியால், கழுதைகளிலும் உயர்ந்தகழுதையாயிருந்தால் அதற்கும் அரண்மனையில் தீனிபோட்டுவளர்க்கப்படும். அனல் நான் என்றுசொல்லப்பட்ட இவனுக்கு நிறைய குப்பைமேடுகளிருக்கிறது விழுந்து புரளலாம்.

(இன்னும் வரும்.)

———:(o):———

ஓம் ஸ்ரீமௌனராஜகுருப்யோநம:

# மிருகசீர்ஷன் கண்டகனவு

அல்லது

(சிறுவருக்கான கதை.)

(49-வது பக்கத்தொடர்ச்சி.)

vii

"ஓகோ யோசம் போனேனே! இந்த அநர்த்தமான வரத்தைத் தேடி சப்பாதித்தேனே! என்ன முட்டாள் தனம்" என்று கையைப்பிசைந்து கொண்டு திபங்கி பிரமித்து நின்றான் மிருகசீர்ஷன். ஏனெனில் தன் மகளைக் குனிந்து முத்தமிட்ட உடனே அவள் ஸ்வர்ண விக்கிரகமாக மாறி விட்டாள். ரோஜா நிறமாக இருந்த அவள் கன்னங்கள் மஞ்சள் நிறமாகமாறி கண்களிலிருந்த நீர்த்துளிகள் கூட தங்கக்கட்டியாக இறுகி விட்டன. தாமரை இதழ்போல் மிருதுவான அவளுடைய கைகள், உலக்கை போல் கடினமாகி விட்டன.

பொன்னுசைகொண்டு தான் கெட்டது மன்றி தன் மகளையும் கொன்று விட்டான். ஆனல் ஸ்வர்ணலேகை இறந்துபோய் கண்காணுதபடி மறைந்துபோய்விடவில்லை. தன் தகப்பன் காலைக்கட்டிக்கொண்டு அவன் முகத்தைப் பரிதாபத்துடன் அண்ணாந்து பார்த்ததுபோலவே இப்பொழுதும் இருந்தாள். இனி எப்பொழுதும் அப்படியேதானிருப்பாள் என்றும் ஏற்பட்டது. கன்னத்திலிருந்த குழிவுகள் கூடத்தவருமல் முகத்திலுள்ள அடையாளங்களெல்லாம் அப்படியே இருந்தன. பேச்சுமூச்சுமட்டுமில்லை, புதிதாய்ப்பார்ப்பவர்களுக்கு வெகு அழகாக அமைக்கப்பட்டதென்று தோற்றக்கூடிய அவ்வுருவம் மிருகசீர்ஷனுக்கு மட்டும் வெகுவேதனையை உண்டுபண்ணிற்று. "நீ அத்தனையும் தங்கம்" என்று அவளைத் தான்புகழ்ந்ததெல்லாம் இப்பொழுதுதான் யதார்த்தமாயிற்று. கண் கெட்ட பிறகு சூரிய நமஸ்காரம் என்றபடி பொன்னைக்காட்டிலும் ஒரு அன்புள்ள ஹிருதயம் எவ்வளவோ மேலானதென்று இப்பொழுது தான் தெளிவாய் ஏற்பட்டது. ஆகாசத்துக்கும் பூமிக்கும் நடுவில் அடுக்கக்கூடிய பொன்மூட்டைகளையெல்லாம் கொடுத்தாவது தன் மகளை உயிர்ப்பித்தால் போதுமென்றுதோன்றிற்று. அவளைப் பிழைப்பிக்கிறதற்காகத் தான் பரம ஏழையான 'ஆண்டியானு'லும் பாதகமில்லை என்று நினைத்தான்.

இப்படி மிருகசீர்ஷன் அவஸ்தைப்பட்டுக்கொண்டிருக்கும்போதே இராஜகுமாரன் வேட்டையாடிவிட்டுப்பரிவாரங்களுடன் மிருகசீர்ஷனுடைய மாளிகையை நோக்கிவந்தான். அவன் ஸ்வர்ணலேகையைப்பார்த்ததுமுதல் அவளைமறக்கவேயில்லை. அவளிடத்தில் அவனுக்குக்காதல் அதிகரித்துக்கொண்டே வந்தது,

விளையாட்டுக் குழந்தைகளாயிருந்தபோதிலும் அவர்களிருவருக்கும் மனதொத்திருந்தது. அவன் தினம் ஒரு முறை ஏதாவது காரணத்தை முன்னிட்டு ஸ்வர்ணலேகையைப் பார்த்துவிட்டுப்போவது வழக்கம். இன்றைக்கு அவன் வந்த சமயத்தில் மிருகசீர்ஷனும் ஸ்வர்ணலேகையும் இருந்த பரிதாபமான நிலைமையைப்பார்த்ததும் "ஹோ" வென்றலறினான். மிருகசீர்ஷனைப் பார்த்தால் ஒரு பிசாசு போல் தோன்றிற்று. முதலில் ஸ்வர்ணலேகையைப்போல் ஒருஸ்வர்ண விக்கிரகம் செய்திருக்கிறதாக்கும் என்றுநினைத்தான். ஆனால் அதன் முன்னின்றுகொண்டு மிருகசீர்ஷன் விசனப்படவேண்டிய காரணம் மட்டும் ஏற்படவில்லை. உடனே சமாசாரம் என்னவென்று விசாரித்துத் தெரிந்துகொண்டு "இனிநாம் இங்கு நின்றால் நம்மையும் தொட்டுவிடப் போகிறான் இந்த சண்டாளன்" என்று பயந்தவன்போல் வெகுவேகமாய்ப் போய்விட்டான். தன் தகப்பன் இருக்கும் அரண்மனையை அடைந்ததும் தன் தாயினிடத்தில் கண்ணும் கண்ணீருமாய் நடந்த விருத்தாந்தத்தைச் சொல்ல அவளும் அதைத் தன் புருஷனிடத்தில் சொன்னாள். அதைக்கேட்ட அச்சிற்றரசனுக்கு மிருகசீர்ஷனிடத்திலிருந்தகோபமெல்லாம்போய்இரக்கமுண்டாயிற்று ராஜ்யத்தை இழந்ததுமன்றி வயதான காலத்தில் தனக்குத் துணையாயிருந்த தன் மகளையும் இழந்து விட்டு அவன் படும் கஷ்டத்துக்கெல்லாம் தானே முதற்காரணம் என்று அச்சிற்றரசனுக்குத் தோன்றிற்று. மேலும் தானும் மிருகசீர்ஷனைப்போல் அதேமாதிரி பேராசை பிடித்திருக்க தன்னை அம்மாதிரி கஷ்டப்படுத்தாமல், அப்பேராசையை நீக்க வேண்டுமென்று மிருகசீர்ஷனுடைய கதியைக்கொண்டே கடவுள் தனக்கு எச்சரிக்கை கொடுத்ததாகவும் தோன்றிற்று. ஆதலால் அவனுக்குத் தான் இந்த வேளையில் உபகாரம் செய்யவேண்டுமென்று அவாப்பிறந்தது. உடனே பரிவாரங்களுடன் மிருகசீர்ஷனைப் பார்க்கப் புறப்பட்டான்.

மிருகசீர்ஷன் இவ்வாறுவருந்திக்கொண்டிருக்கையில் அவனிருந்த அறையில் கொஞ்சங்கொஞ்சமாய் வெளிச்சம் அதிகரித்தது. அண்ணாந்து பார்க்கையில் ஜன்னலில் எழுதப்பட்டிருந்த லக்ஷ்மிபடம் முன்போல் உயிர்த்தெழுந்து இவனைப் பார்த்து புன்னகைகொண்டு நின்றது. மிருகசீர்ஷன் வெட்கித்தலை குனிந்து நின்றான். எதிரே நிற்கும் தன் மகளின் உருவம் இந்தத் தேவதையினுடைய ஜோதியில் முன்னிலும் அதிகமாய்ப் பிரகாசித்தது.

"என்ன மிருகசீர்ஷா, ஸ்வர்ணஸ்பர்ச சக்தி எப்படியிருக்கிறது?" என்று தேவதை கேட்டாள்.

மிருகசீர்ஷன் உதட்டைப் பிதுக்கிக்கொண்டு தலையை யசைத்தான். இதைத்தெரியாத் தனமாய்க் கேட்டு வாங்கிக்கொண்டேன். இப்பொழுது அவஸ்தைப்படுகிறேன்' என்றான்.

"அவஸ்தைப்படுகிறாயா? இதென்ன ஆச்சரியம்! ஏனப்படி? நீகேட்டபடியே வரம் பலிக்க வில்லையா? இன்னும் உன்மனது திருப்தி யடைய வில்லையா?" என்று தேவதை கேட்டாள்.

"மனது திருப்தியடைவதற்குப் பொன்மட்டும்போதாது. பொன்னுக்குமேல் எனக்கருமையாயிருந்த என் மகளை யிழந்து விட்டேன்" என்றான்.

"ஆனால் நேற்று வரையில் நீயறியாத சில புதிய விஷயங்களை இன்று கண்டு பிடித்திருக்கிறாப் போலிருக்கிறது. எங்கே பார்ப்போம், இப்பொழுது உனக்குத் தோன்றுகிறதைச் சொல். ஒரு கிண்ணம் சுத்த ஜலம் விலையுயர்ந்ததா அல்லது ஸ்வர்ணஸ்பர்ச சக்தி விலையுயர்ந்ததா?" என்றாள்.

"என் தொண்டை வரண்டுபோகிறதே, எனக்கொரு சொட்டு ஜலம் கிடைத்தால் இந்த ஆபத்து விளைவிக்கும் சக்தியைக் கொடுத்து விடுகிறேன்."

"ஒரு துண்டு ரொட்டி வேண்டுமா? அல்லது ஸ்வர்ணஸ்பர்சம் வேண்டுமா?"

உலகத்திலிருக்கிற பொன்னெல்லாம் கொடுத்தாவது ஒருதுண்டு ரொட்டி என் பசியை யாற்றினால் போதும்."

"ஸ்வர்ணஸ்பர்சம் மேலானதா, சிரித்து விளையாடிக்கொண்டு மிருதுவான அன்புள்ள ஹிருதயத்தோடு கூடிய குழந்தை மேலானதா?

"ஐயோ, என் குழந்தாய்! உலகமுழுவதும் தங்கமாகினாலும் அவளுடைய கன்னத்திலுள்ள குழிவுக்குக்கூட ஈடாகாது" என்றான்.

"இந்த ஒருநாளில் எவ்வளவோ விஷயங்கள் தெரிந்து கொண்டுவிட்டாயே! நேற்றைக் காட்டிலும் இன்றைக்கு எவ்வளவோ புத்திசாலியாய் விட்டாயே! உன்காது கூட நேற்றிருந்த அளவு நீளமாயிராமல் குறுகிக் கொண்டு சாதாரண மனிதர்களுடைய காதைபோலாகிவிட்டதே! நல்ல வேளையாய் உன் ஹிருதயமும் தங்கமாய் மாறாமலிருந்தது உன் பாக்கியம் தான். அப்படியானால் இந்த ஸவர்ணஸபர்ச சக்தி வேண்டாமென்கிறாயா என்ன?" என்று தேவதை கேட்டாள். "அது என்னை விட்டு நீங்கினால் போதும்" என்றான்.

இப்படி சொல்லிக்கொண்டிருக்கும் போதே அவன் மூக்கின் மேல் ஒரு துரதிர்ஷ்டம் பிடித்த ஈ உட்கார்ந்து அப்படியே மஞ்சள் குன்றுமணிபோல் உருண்டு விழுந்தது. அதுவும் தங்கமாக மாறிவிட்டது. அந்த தேவதை சிரித்தாள். மிருகசீர்ஷன் நடுங்கினான். "அப்படியானால் உன் தோட்டத்துக்கப்பால் ஓடும் சங்கராபரணி நதியில் ஸநானம் செய்து விட்டு ஒருகலசத்தில் அதன் தீர்த்தத்தை எடுத்து வந்து உன்னுடைய ஸபர்சத்தினால் நாசமடைந்த வஸ்துக்கள் மேல் தெளித்தால் அவைகளெல்லாம் ஒருக்கால் முன்போல் இருந்தபடி ஆனாலும் ஆகலாம் இதைத்தவிர வேறு வழியில்லை" என்று சொல்லிவிட்டு தேவதை மறைந்தாள். மிருகசீர்ஷனும் கண்ணும் கண்ணீருமாய் அவளை நமஸ்கரித்தெழுந்தான்.

மிருகசீர்ஷன் கொஞ்சங்கூட காலதாமதம் செய்யாமல்ஸ்நாநத்துக்குப்புறப்பட்டானென்று சொல்லாமலே தெரிந்து கொள்வீர்கள். தீர்த்தங்கொண்டுவருகிறதாக ஒரு மண் குடத்தை (அதாவது இவன் தொட்ட பிறகு தங்கக்குடத்தை) எடுத்துக்கொண்டு போனான். போகும்பொழுதே இவன் காலடியிலிருந்தபுல்லும் அக்கம் பக்கத்திலிருந்து இவன் கை கால்களில் பட்ட செடிகொடிகளும் மஞ்சள் பூஞ்சளாய் சரகுதிர்க்கும்காலம் வந்து விட்டதுபோல் பழுத்து வாடிப்போயின. நதிக்கரை சேர்ந்ததும் வஸ்திரத்தைக் கூட செவ்வையாய் இழுத்துக்கட்டிக்கொள்ளாமல் பொத்தென்று குடத்தோடு தண்ணீரில் விழுந்தான், விழுந்து முழுகி "பூ! பூ!" என்று வாயிலிருந்து ஜலத்தைக் கொப்பளித்துக்கொண்டே எழுந்து குடத்தை ஜலத்தோடு வெளியே தூக்கினான். தூக்கும்பொழுதே அது எப்போதும் போல் சாதாரண மண்குடமாயிருப்பதைப் பார்க்க வெகு சந்தோஷமாயிற்று. அப்படியே தலையைக் கூடத் துவட்டிக்கொள்ளாமல் வீட்டைநோக்கிப் போனான். போகும்பொழுதே இவனுடைய ஈரத்துணிகளிலிருந்து ஜலம் தெறித்ததினாலும் சொட்டினதினாலும் முன் இவன் நடந்து போனபொழுது தங்கமாக மாறினவை மறுபடியும் செடிகளாகவே ஆகிவிட்டன. இன்னும்ஸ்வர்ணஸ்பர்சம் தன்னை விட்டதோ இல்லையோ என்று சந்தேகித்துக்கொண்டு ஒரு அலரிப்பூவைத்தொட்டான். அது தன்னிறம் மாறாமல் எப்போதும்போலிருந்தது இவனுக்கு திருப்தியாயிற்று. நல்லவேளையாய் தன்னிடமிருந்த அனர்த்தமான சக்தி தன்னைவிட்டுத்தொலைந்தது.

நேராகவீட்டுக்குள் சென்றான். சாயந்திர வேளையில் தங்கள்யஜமானன் முழுகிவிட்டுக் குடமும் தண்ணீருமாய் வருவதைப்பார்த்து வேலைக்காரர்களெல்லாம் பிரமித்து நின்றார்கள். ஆனால் அந்தக்குடத்திலுள்ள ஜலத்தை லக்ஷம்வராகனுக்கு விலைக்குக்கேட்டாலும் மிருகசீர்ஷன் கொடுக்கசம்மதிக்கமாட்டான், வீட்டுக்குள் தானிருந்த அறையில்பிரவேசித்ததும் முதல் காரியமாக ஸ்வர்ணவிக்கிறஹத்தின்மேல் கை கையாக ஜலத்தை அள்ளித்தெளித்தான். அந்த ஜலம் மேலே பட்டவுடனே அந்தக்குழந்தையின் ஸ்வாபாவமானரோஜாநிறம் திரும்பி வந்ததையும் அவள் தும்மிக்கொண்டு ஜலத்தை உதறிக்கொண்டு ஆச்சரியத்துடன் சுற்றுமுற்றும் பார்த்ததையும், மேன்மேலும் அவள் தகப்பன் அவள்மேல் ஜலத்தைக்கொட்டினதையும் பார்த்தால் யாராயிருந்தாலும் சிரித்துவிடுவார்கள்.

"ஏனப்பா என்மேல் ஜலத்தைக் கொட்டுகிறாய்? நிறுத்து, நிறுத்து! என் துணியெல்லாம் நனைந்து போயிற்றே! இன்று காலையில் தானே இந்தப்புதுப்பாவாடை கட்டிக்கொண்டேன்!" என்று அவள் ஒதுங்கிப்போய்க்கொண்டிருந்தாள். அவளுக்குத் தான் இந்நேரம் ஸ்வர்ணவிக்கிரகமாக மாறியிருந்தது தெரியாது, தான் தகப்பனார் க லைக்கட்டிக்கொண்டது முதல் தன்மேல ஜலம்விழுந்த வரையில் நடந்த விஷயம் தெரியாது.

மிருகசிர்ஷனுக்கு தன் முட்டாள்தனத்தைத்தன்மகளிடத்தில் சொல்லிக்கொள்ள இஷ்டமில்லை. ஆதலால் அவளையும் அழைத்துக்கொண்டு தோட்டத்துக்குச் சென்று. அங்கிருந்த தங்கரோஜா புஷ்பங்களையெல்லாம் பழையபடி சாதாரண புஷ்பங்களாக மாற்றித் தன்மகளை சந்தோஷிப்பித்தான். இவர்கள் தோட்டத்தி லிருக்கையிலேயே இவனுடைய சத்துருவாகிய சிற்றரசனும் அவன் மகனுகிய ராஜகுமாரனும் பரிவாரங்களுடன் வந்து சேர்ந்தார்கள். ராஜகுமாரன் ஸ்வர்ணலேகை எப்பேதும்போல் பெண்ணுயிருக்கக்கண்டு சந்தோஷத்தை அடக்கமாட்டாமல் அவளை ஆலிங்கனம் செய்துகொண்டான். அவள் ஸ்வர்ணமயமாய் மாறியிருந்ததையும் அவள் பிழைத்தது புனர்ஜன்மம் என்பதையும் அவனுக்குத் தெரிவித்து ஆர்சரியத்தைவிளைவித்தான். ஸ்வர்ணலேகையும் தன் தகப்பனாரைப்பார்த்து "நிஜந்தானு அப்பா?" என்று சிரித்தாள். மிருகசிர்ஷன் ஒன்றுஞ் சொல்லாமல் தலைகுனிந்துகொண்டான்.

கதையை விஸ்தரிப்பானேன்! மிருகசிர்ஷனுக்கும் வந்திருந்த சிற்றரசனுக்கும் அதிசீக்கிரமாய் ஸ்னேகமுண்டாகி இருவரும் ஒரு உடன்படிக்கைக்கு வந்தார்கள். இருவருக்கும் தாங்கள் ராஜ்யபரிபாலனம் செய்தது போதுமென்று ஏற்பட்டது. ஆதலால் தங்கள்குழந்தைகளுக்கு விவாகத்தைச்செய்துவிட்டு ராஜகுமாரனுக்கு முடி சூட்டித் தாங்கள் சாவகாசமாய் பகவத்தியானத்திலிருந்து ஸத்காலக்ஷேபம் செய்வதாகத் தீர்மானித்தார்கள். அன்றிரவு நதிக்கரையில் நிலவில் எல்லோருக்கும் விருந்து நடந்தது மிருகசிர்ஷன் பகல் முழுவதும் பொறுத்திருந்த பசிதீர நன்றாய்ச்சாப்பிட்டான். அந்நதிக்கரையிலேயே கூடாரமடித்து எல்லோரும் அங்கேயே படுத்துறங்கினார்கள். பொழுது விடிந்ததும் மிருகசிர்ஷன் கண்ணைத் துடைத்துக்கொண்டு படுக்கையை விட்டு வெளியே வந்து பார்க்கையில் தான் எப்போதும் போல் சக்கரவர்த்தியாகவே தனதரண்மனையிலேயே இருப்பதாக ஏற்பட்டது. தான் இந்நேரம் பட்ட கஷ்டங்களெல்லாம் கனவென்றும் ஏற்பட்டது.

ஆனுல் அன்று முதல் அவனுடைய பேராசை நீங்கி ஸ்வபாவம் முற்றிலும் மாறிற்று. தான் கண்ட கனவுப்படி தன் மகளை அச்சிற்றரசனுடைய மகனுக்கு விவாகம் செய்து வைத்து அந்த ராஜகுமாரனுக்கு முடி சூட்டித் தான் விச்ராந்தி யடைந்துகொண்டு வெகு காலம் ஜீவித்திருந்தான்.

அதற்குப்பிறகு அவன் மாலை மஞ்சள் வெயிலைத்தவிரவேறு தங்கமயமான காந்தியைக் கண்ணுல்பார்த்ததில்லை. தன் மகளுடைய் பெயரைக்கூட "ஸ்வர்ணம்" "தங்கம்" என்கிற வார்த்தைகள் அவனுக்குக் காதினுல் கேட்கப் பிடிக்கவில்லை.

வெகுநாள் கழித்துத் தன் பேரப்பிள்ளைகளுக்குக்கதை சொல்லும் பொழுது தான் கண்டகனவை சற்றேறக்குறைய இப்பொழுது நான் உங்களுக்குச் சொல்லியது போலவே சொல்லி அவர்களைச் சிரிக்க வைப்பான்.

(முற்றிற்று.)

(அருள் நினைந்தழுதல்.)

"உடம்பதாயழியுமென்னையுன் திருமேனியாக்க
உடப்பதாய்வந்தவுன்றன் ஒப்பிலாவருளைநோக்கி
உடம்பெலாமுள்ளமாகியுடைந்துநைந்துருகிடாதே
உடம்புளமுழுதுங்கல்லொத்திரிந்ததே யுடையகோவே."

(இறைவன் திருவிளையாட்டு.)

"பழுதிலா வண்டமுற்றும்பண்ணியு மளித்தழித்து
முழுதையு மறைத்து மூடமறைத்ததைவெளிப்படுத்து
பெழுகரு முழுதுமாகி யிலகிடுமிறைவனூர் தங்
கழிவறும் விளையாட்டென்றன் கண்ணினின்றகலாவாறே."

 नारायणं नमस्कृत्य नरं चैव नरोत्तमम् । देवींसरस्वतींव्यासंततोजयमुदीरयेत् ॥




"உன்னைமறக்கிலெந்தாயுயிரென்னுடம்பில்வாழுமோ
உன்பாலன்றிப் பிறர்பாலென்றனுள்ளஞ் சூழுமோ
என்னைக்கொடுக்கவாங்கிக்கொண்டதென்னகருதியோ
எந்தாய்நின்னைக்கொடுக்கவென்பாலின்று வருதியோ."

## BHÂRATÎ MÂTA.

भारती माता.

பாரதீ மாதா.

# BHÂRATÎ MÂTA.

## "பாரதீ மாதா."

"Thou art the Word and I am its Meaning."—*Siva to Devi in Skandapurâna.*

"All things indicated by words in feminine gender are manifestations of Devi."—*Com. on Rahasyanamavali.*

"When you sport as a man (you become) the five persons (*Panchabrahmasvarûpinî*); your casual talk (becomes) the three Vedas; O Mother, a glance of your eyes (becomes) the sun; and your sweet smile, the moon."—*Achâryavâk.*

"முன்னையிட்ட தீ முப்புரத்திலே
பின்னையிட்ட தீ தென்னிலங்கையில்
அன்னையிட்ட தீ அடிவயிற்றிலே
யானுமிட்ட தீ மூள்க மூள்கவே."—பட்டணத்துப்பிள்ளை.

சென்ற சஞ்சிகையில் "ஸ்ரீமாதாவின் மஹிமையை மண்டலமெங்கும் பரவச் செய்யுங்கள்'' என்று சொன்னோம் மாதாவின் மஹிமை தானாகப்பரவுங்காலம் கிட்டிவிட்டதென்று தோன்றுகிறது. எங்குபார்த்தாலும் ஜனங்கள் "தாயே! தாயே!'' என்று தபிக்கிறார்கள். இந்தத்தாபம் வீண்போகாது. ஆறுவெள்ளமெடுத்தால்அணைகட்டலாம். சமுத்திரம்பொங்கினால் அதற்கு அணைபோட யாரால்முடியும்? இந்தியா ஆதிமுதற்கொண்டு மஹாத்மாக்கள் வசித்த பூமி. க்ஷேத்ரக்ஷேத்ரஜ்ஞவிபாகயோகப்படி, க்ஷேத்திரம் வேறு க்ஷேத்ரஜ்ஞன் வேறு என்று போதனார்த்தம் பிரித்துணரலாமானாலும் அனுபவத்தில் க்ஷேத்ரம், க்ஷேத்ரஜ்ஞன் என இரண்டும் துவைதமாகவில்லை. அனுபவரீதியாக அவையிரண்டுக்குமுள்ள சம்பந்தத்தைப்பார்த்தால் அது "அவயவ அவயவி'' யைப்போலவும், பழுக்கக்காய்ச்சின அயப்பிண்டத்தைப்போலவும், தாதாத்மியமாக சம்பந்தப்பட்டிருக்கிறதென்று தெரியவருகிறது. தாதாத்மியசம்பந்தம் என்றால் என்ன? என்று பின்னும் சிலர் சொன்னதையுணரமாட்டாமல் கேட்பார்கள். "தாதாத்மியம்" என்றால் அதுவே அதுவாயிருக்கிறது அன்று அருத்தம். அதாவது இரண்டாகத்தோன்றும் இரண்டுவஸ்துக்கள் ஒன்றைவிட்டொன்று பிரிக்கக்கூடாமல் ஒன்றே மற்றொன்றாகப் பரிணமித்துக்காட்டிப் பின்னர் அத்தோற்றம் அதன்காரணத்தில் ஒடுங்கி ஒன்றாகவிருப்பது எதுவோ அதுவே தாதாத்மியமாயிருத்தலாம். உதாரணமாக, உடலும் உயிரும் இரண்டாகக்காணப்பட்டாலும், அவற்றைப்பிரித்துக்காண்பது முடியாது. உயிரைவிட்டுப்பிரிந்த உடல் உடலாகமாட்டாது. அதற்குப் "பிணம்!" என்றுபேர். உடலைவிட்டுப்பிரிந்த உயிரும் உயிராகமாட்டாது. உயிர் உபாதிரகிதமானால் அது பிரஹ்மஸ்வரூபமாகிறது. "அதற்குப்பேருமில்லை, ஊருமில்லை'' என்பார்கள். அப்படியென்றால் அவனன்றிப் "பேரும்ஊரும்'' அவனுக்கு அந்நியமாகவுண்டென்று அருத்தமில்லை. எல்லாப்பெயரும் எல்லாஊரும் அவனாகவேயிருக்க, எந்தப்பெயர், எந்தஊரைக்குறித்துச்சொன்னாலும் அவன் மஹிமைக்குக்குறைவுவருவது பற்றி அவன் "வாசாமகோசரமானவன்''—மனோவாக்குக்கெட்டாதவன், என்பதின் கருத்தையப்படிச்சொல்கிறார்கள். இதை சாமான்ய ஜனங்கள் நுட்பபுத்தியின்றி தப்பர்த்தம்

செய்து கொண்டு பிதற்றுவதுண்டு. இதைக்கேட்டு உள்ளறிவில்லா உணர்வுகெட்ட "பண்டிதர்களான" கற்றறிமூடர்கள் உண்மையையுணராமல்தானே வார்த்தைகளை யடுக்கி தர்க்க வியாகரண தந்திரங்களால் இல்லாததையெல்லாம் இருப்பதாக அனுமானித்து அதற்கேற்றபடி போலிநியாயம் கண்டு வார்த்தைகளை இட்டுக்கட்டிப் "பொய்ம்மதஸ்தாபனம்" செய்கிறார்கள். இதனால் வரும் கேடு இவ்வளவு அவ்வளவு அல்ல. ஸ்கந்தபுராணத்தில் பரமசிவன் பார்வதிக்குபதேசம் செய்கையில் "நீ வார்த்தை, நான் அதன்பொருள்" என்று சொல்லியிருக்கிறார். யேசுநாதரின் பிரதமசிஷரும் யோகஸாம்பிராஜ்யமுக்தருமான ஸேண்ட் ஜான் எழுதியிருக்கும் பேசுவாக்கியக்கிரந்தத்தில் அநாதியாயுள்ள நித்தசுத்தபரம் பொருளிலிருந்து ஆதியான வாக்குப்பிறந்தது என்று சொல்லியிருக்கிறார். அவர் வாக்கு இது :—

"ஆதியிலுள்ளானனாதியொன்றே
ஆதியனாதியு மவனே யாவன்
அனாதி யாமவ னாதியதாக
அதியிற் பிறந்தது நாதந்தானே."

"நாதமு நாதாந்தமு மொன்றே
ஆதியில் நாதமனாதியிலொடுக்கம்
ஆதியனாதிபோல் நாதமனாதி
ஆதியு நாதமும் அனாதிதானே."

இப்படி ஆதியும் (நாதம், சொல், சுருதிவாக்கு) அதின் பொருளாகிய அனாதியும் எப்படி ஒன்றாக (தாதாத்மியமாக) விருக்கிறதோ, அப்படியே, உடலும் உயிரும், சொல்லும் அதன்பொருளும், அவயமும் அவயவியும்போல், அத்வைதமாய் (இரண்டற்றதாய்) பொருந்தியிருக்கிறன. இவற்றைப்பிரிப்பது அசாத்தியம். அசாத்தியத்தை சாத்தியம்போல்காட்டுவது ஜாலவித்தையன்றி வேறல்ல. ஜாலவித்தையென்றால் பொய். அண்டப்புளுகானால் அந்த மாயை யென்றும், பூமத்திய பாதாளம் வரையில் எட்டத்தக்கதானால் அதை இந்திரஜாலம், மஹேந்திரஜாலமென்றும் சொல்கிறது. சின்னப்புளுகானால் அதைப்பொய்யென்றும் புரட்டென்றும் சொல்கிறது. பிரிவிலாவஸ்து பிரிந்ததானால் மிஞ்சுவது ஒன்றுமில்லை, உயிர்பிரிந்தால் உடலின் கதியென்னவாகிறது ?

"ஊரெலாங்கூடி யொலிக்க வழுதிட்டுப்
பேரினை நீக்கிப் பிணமென்று பேரிட்டுச்
சூரையங்காட்டிடை கொண்டு போய் சுட்டிட்டு
நீரினில் மூழ்கி நினைப் பொழிந்தார்களே."—திருமந்திரம்.

இது இப்பூதவுடலின் கதியானால், உலகுக்கெல்லாமுயிராயிருந்து ஆட்டுவிக்கும் அகண்ட சச்சிதாநந்த மூர்த்தமாயிருக்கும் ஈசுவரனை விட்டுப்பிரிந்தால் அவ்வுலகின் கதியென்னாகும்? ஹிந்துக்களுக்கு அதைச்சொல்லிகாட்டத்தேவையில்லை. செத்தபிணத்தைச் சுடுகாட்டிற் கொண்டுபோய்ச்சுடுவது எப்படியோ அப்படியே உலகமனைத்தும் அந்த ஈசுவரனுடைய நகைத்தீயினால் தஹிக்கப்பட்டுநீறாகிஆதிபராசக்தியின் பாததூளியிலிருந்துண்டானபடியே எல்லாம் அவள் பாததூளியாகப்போகிறது. முன்னொருகாலத்தில் தேவர்களெல்லாம் கர்வத்தினால் ஈசுவரனை மறந்து தங்களையே மேலாகநினைக்க, எல்லாருள்ளத்திலும் வசிக்கும் கள்ளனாகிய அவன் அதையறிந்துபக்கத்திலிருந்த திரிபுரசுந்தரியாம்தேவியைக்கடைக்கண்ணால்நோக்க, அக்குறிப்பறிந்த தேவியும் ஓர் நகைநகைக்கத் திரிபுரங்களும் அந்நகைத்தீப்பட்டு ஒருநொடி

யில் சாம்பலாயின. பிற்பாடு இராவணேசுவரன் ஸத்தியஸ்வரூபியாகவிருக்கும் பகவானுடைய சாசுவதமான ஸநாதநதர்மங்களை மறந்து "விநாசகாலே விபரீதபுத்தி" யென்று சொல்கிறபடி முக்திதேவதையாம் சீதாபிராட்டியாரைப்பிடித்துச் சிறையிலடைத்ததுமன்றி அத்தேவியைத்தேடிவந்தபரமதூதனும் அஞ்சனபுத்திரனையும் (அநுமார்) துராகிருதமாகப் பிடித்து வதைக்க, ஸ்ரீதேவியின் அம்சமேயான சீதாபிராட்டியின் அருட்பிரவாகமகிமையால் ஹநுமார்வாலில் துணியைக்கட்டிக்கொளுத்திய தீயானது அவரைச்சுடாமல், தன்தொழில் விடுத்துக்குளிர்ந்து நிற்க, சத்தியத்துக்குக் கட்டுப்பட்டவராய் அவன் செய்த அக்கிரமங்களுக்கெல்லாம் உட்பட்டிருந்த அந்த ஆஞ்சநேயமூர்த்தி அவரைக்கட்டியபிரம்மாஸ்திரம் (சத்தியத்துக்குட்படவேண்டுமென்கிற மனக்கட்டு) தனிலிருந்து விடுபட்டதும், உக்கிரசங்நத்தராய் அத்தீயைக்கொண்டே அந்த லங்காபுரியைச்சுட்டெரித்தார். இப்படி திரிபுரதஹனத்துக்குக் காரணமாயிருந்ததீயும், லங்கா புரியைச்சுட்டெரித்த தீயும், அக்னிஸ்வரூபமான ஈசுவரனது சக்தியேயன்றி வேறல்ல. அந்த அக்னி பிண்டஸ்வரூபமான எண்சாணுடலில் குண்டலினி சக்தியாக அடிவயிற்றில் தூங்கிக்கொண்டிருக்கிறது. இந்த மூன்றுவிதத்தீகளும், உண்மையாகப்பார்க்கில் ஒன்றே. இவற்றைப்போலவே ஸ்வாநுபவச் செல்வர்களான ஞானிகள் வாக்கும் அக்னிஸ்வரூபமாம். இந்தநாளும் பிரஹ்மஸ்வரூபமான அக்னியே. சூரியனும் அந்த அக்னிஸ்வரூபமே. சாந்தோக்கிய உபநிஷத்தில் சொல்லியிருக்கும் பஞ்சாக்னிவித்தையின் உண்மையை ஸ்வாநுபவத்தாலுணர்ந்துய்ந்தவர்கள் இந்தநித்தியாக்னி ஸ்வரூபத்தை நிர்மலாகாரமாயிருந்துணர்வாராவர்! இந்த அக்னியின்ஸ்வரூபம் தேவியின் இரகஸியநாமாவளியில் பரமஇரகசியமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. இந்த அக்னியைக்கொண்டே மஹாதுறவியான பட்டினத்துப்பிள்ளையவர்கள் தாம் தாயாருக்குச் செய்யவேண்டிய தஹனஸம்ஸ்காரங்களைச்செய்து முடித்துஅவர் ஆத்மாவைக்கரையேற்றி வைத்தார். அவர் முற்றத்துறந்த மஹாதுறவியாயிருந்தும் முக்திசாதனமான உடலையீன்ற அன்னைக்குரிய நெருப்புக்கடனைக்கொடுத்துக் கழிக்கப் பின்வாங்கவில்லை. "காசிக்குப்போனாலும் கர்மம்விடாது" ஸ்ரீமத் பகவத்பாத சங்கராசாரியர்அவர்களும் இப்படியே துறவியாயிருந்து மாத்ருகர்மத்தைக்கைவிடாது செய்தார். அவர்விஷயத்தில் அவரது தாயார், பிராம்மணாசாரத்துக்குக் குறைவின்றி ஏகபுத்திரனுள்ள அவர் கையால் நெருப்புவாங்கிக்கொண்டு போகவேண்டுமென்று இஷ்டப்பட்டதால் அவர் இஷ்டத்துக்குக்குறைவுவராமல் நடப்பதாகக் கொடுத்த வாக்குத்தவறாதபடி அவருக்குச் செய்யவேண்டிய கிரியைகளையும் கிரமப்படிசெய்தார். அதற்கு அவர் ஜாதியாரெல்லாம்எதிரிடையாயிருந்தும், அவர் ஸத்தியவிரதத்துக்கு மேற்பட்ட ஆசாரமில்லையென்று தான் வாக்குக்கொடுத்தபடி ஊரெல்லாம் பகைத்தும் தான் ஒருவரேயாகவிருந்து கர்மங்களையெல்லாம் செய்து தீக்கடன் கழித்தார். பட்டணத்துப்பிள்ளைக்கு அவ்விதவாக்குப்பந்தமில்லாமையால், அவர் இயல்பாகத் தான் செய்யவேண்டிய கர்மத்தை அவரது இஷ்டம்போல், வாழைமரத்தை யடுக்கி அதற்கு வாக்தீயால் நெருப்புவைத்து மூட்ட அது வுடனே பற்றிக்கொண்டெரிந்து நீறாகி விட்டது. அந்த வாழையினை லடுக்கிய சிதைக்கு அவர் நெருப்பிட்டபோதுசொல்லியமஹாவாக்கியத்தை இதன்தலைப்பில் காணலாம். அதைப்பின்னு மிங்கெடுத்து வரைவோம்:—

"முன்னையிட்ட தீ முப்புரத்திலே
பின்னையிட்ட தீ தென்னிலங்கையில்
அன்னையிட்ட தீ அடிவயிற்றிலே
நானுமிட்ட தீ மூள்க மூள்கவே."

இந்த அக்னிஸ்வரூபமான பகவானே, பின்னும் இவரைக்கொடுமையான மரணதண்டனையினின்றும் காப்பாற்றிவைத்தார். இவர் துறவுபூண்டபின், ஏகாந்தியாய் ஒரு தனிக்கோவிலில் நிஷ்டைபுரிந்திருக்கையில் சில திருடர்கள் கூட்டக்கொள்ளையடித்துவந்த நகைகளை அங்கு வந்து புதுக்கிவைத்துப்போக, போலீஸ் புலிகளான ஊர்க்காவலர், திருடரைப்பிடிக்க உளவு அகப்படாமல், நகைகள் மட்டும் அகப்படவே, "கழுவுக்கேற்றகோமுட்டி" வேண்டுமேயென்கிறவிசாரம் நீங்க, இவரைப்பிடித்துக் குற்றஞ்சாட்டி கையும் களவுமாக அகப்பட்ட

களவாணியென்று கொண்டுபோய் இராஜசமுகத்தில் நிறுத்த, அரசன் விசாரித்துத் தூக்கில் போடும்படி உத்திரவளித்தான். மனக்குரங்கின் சேஷ்டையடங்கிய மஹாமௌனியாகிய பட்டினத்துப்பிள்ளையார், ஒன்றுக்கும் வாய் திறக்காமல் எல்லாவற்றிற்கும் சாக்ஷிமாத்திரமாயிருந்தார். தூக்குமரம்நட்டு, இவரைக்கொலைக்களத்துக்குக்கொண்டுபோகவும், இவருடைய ஸ்பரிசமாத்திரத்தினால் தூக்குமரம் தீப்பற்றியெரிந்து போய்விட்டது. இந்த அற்புதத்தைக் கேட்ட அரசன், இதில் ஏதோவிசேஷமிருக்கிறதென்று, குற்றவாளியைத் தனிமையாக வரவழைத்து ஆராய்ந்துபார்க்க அவர் மஹாத்மாவென்று கண்டு, அவர்காலில்விழுந்து மன்னிப்புக்கேட்டுக்கொண்டான் என்று சரித்திரம் கூறுகின்றது.

இப்படி யெங்கும் எல்லாவற்றிலுமிருந்து காப்பதும் அழிப்பதும், திரும்பிப்படைப்பதுமாயிருக்கும் "அக்னிஸ்வரூபம்" ஒன்றே. அதை 'சித்-வந்நி' யென்றும் "சித்-அக்னி" யென்றும் சொல்லுவார்கள். இந்த அக்னியை யோகிகள் அந்தர்முகமாகவும், பஹிர்முகமாகவும் பூஜிப்பார்கள். அந்தர்முகத்தில் பூஜிக்கும்பொழுது அந்தர்யாகம் செய்து தங்கள் காமக் குரோத லோப மோஹ மத மாச்சரியாதிகள் நீங்கிய பரிசுத்தமான அந்தக்கரணத்தில் "சிதக்னிகுண்டத்தை" ஸ்தாபித்து ஸர்வத்தியாகம் செய்து மும்மலங்களையும் போக்கிக் கொண்டு ஈசுவரஸ்வரூபத்தை யுள்ளபடியறிந்துய்வார்கள். தேவியோடு ஐக்கியப்பட்ட பின் இவர்களே, தேவியின்தொழிலை நடத்தும்படி ஸ்வசங்கல்பமொன்றுமின்றி ஈசுவரசங்கல்பவசத்தராய், உலகுக்கு நன்மைசெய்ய உழைப்பார்கள். "சிதக்னிகுண்டசம்பூதை" யான பரதேவி எப்போதும் "தேவகாரியசமுத்பதை" யாக விருப்பதால், உலகுப்ப உண்மை விளங்க தர்மந்தழைத்து அதர்மமழியவேண்டியபொழுது "தேவகாரிய"மான அந்நன்மையைச் செய்யும்பொருட்டு துஷ்டநிக்கிரக சிஷ்ட பரிபாலனார்த்தம், அவளைச்சரணடைந்துபாசித்து அந்தர்யஜ்ஞ, பஹிர்யஜ்ஞங்களால் அவளைத்திருப்திசெய்யும் சுத்தமுக்தபக்தர்களான யோகிகளுக்குஅந்தர்முகத்தில் ஹிருதயகமலவாசியாகவும், பஹிர்முகத்தில் இஷ்டமூர்த்தமாகவும் தோன்றிபருள்செய்து ஆதரிப்பள். "எண்ணினார்க் கெண்ணினபடி யிருந்தருளுமீசன்" திருமூர்த்தங்களை இன்ன தினியதென்று வரையரைந்து சொல்லுதல் முடியாது. ஆனால் அவன் தத்துவஸ்வரூபியாதலால், "தத்துவமெங்குண்டு, தத்துவனங்குண்டு" என்றதிருமந்திரப்படி, யாதாமொரொருவர் ஸநாதநதர்ம வழிப்பட்டு, தத்துவங்களையுணர்ந்து தத்துவமே யாகிநிற்கிறார்களோ அவர்களிடத்தில், ரூபாரூபமாகவுமிருந்து அவர்கள் மனதைச் செலுத்துகிறானென்பது சத்தியம்.

"ஓம், ஸ்ரீமதா, ஸ்ரீமஹாராஜ்ஞி, ஸ்ரீமத்ஸிம்ஹாஸனேசுவரி, சிதக்னிகுண்டஸம்பூதா, தேவகாரியஸமுத்யதா" வென்று ஹயக்ரீவபகவான் திருவாக்கினால் அகஸ்தியமுனிக்குபதேசிக்கப்பட்ட இரகசியநாமங்களின் உண்மையையுணர்ந்த மஹான்கள் திருவடியேசரணமாயிருக்கும் நாம் அவள் மஹிமையைப்பற்றி என்ன சொல்லப்போகிறோம்! ஆனாலும் நாம் கண்ட சாக்ஷியைக்கனவிலும் நனவிலும் நினைந்து நினைந்து நைந்துருகிக்கொண்டிருந்த நமக்கு அக்காக்ஷியை விளக்கும் சக்தியின்மையால் வாயால் பிதற்றிக்கொண்டிருந்தோம். நம்மைப்போல் இந்தியாவின் க்ஷேமத்தையே நாடிக்கொண்டு உள்ளமுருகும் மஹான்கள் எத்தனைபெயர்களோ?

"பூரணி புராதநி சுமங்கலை சுதந்தரி புராந்தகி த்ரியம்பகி யெழிற்
புங்கவி விளங்குசிவ சங்கரி சஹஸ்ரதள புஷ்பமிசை வீற்றிருக்கும்
நாரணி மநாதீத நாயகி குணாதீத நாதாந்த சத்தி யென்றுன்
நாமமே யுச்சரித் திடுமடியர் நாமமே நானுச் சரிக்க வசமோ!"

இப்படிப் பெரியோர்களால் துதிக்கப்பட்ட அம்பிகையின் மஹிமையைச்சித்திரத்தி லெழுதியும் வாயினாலுரைத்தும் உள்ளபடி விளக்குவது வசமோ? "அகிலாண்ட கோடியீன்ற அன்னையே பின்னையும் கன்னியென மறைபேசும் ஆனந்த ரூபமயிலே!" யெல்லா ரூபமும் நீயே! விரூபமும் நீயே! அரூபமும் நீயே! ரூபாரூபமும் நீயே! அப்படியிருக்க, உன்னை யார் யார் எப்

படித் தொழுகிறுர்களோ அவரவர் மனதில் அப்படியப்படியிருந்தருள்புரிகிறாய்! ஆதலால் "பாரதீ மாதா" ரூபமாயிருக்கும் உன்னை என் அஹத்தின்கண்வைத்து தியானித்து தியேயாகாரமான உன்னோடிரண்டறக் கலந்துன் திருவுள்ளத்தை யறிவதன்றி யான்வேறு செய்வு தொன்றுண்டோ?

சுத்தமுக்த பக்தயோகியின் சிதக்னிகுண்டத்திலிருந்துதித்தநீ "எங்கினும் வியாபி"யாயிருந்தும், பகீரதன் போன்ற மஹாயோகிகள் செய்த தபோமகிமையால் அவர்கள் தவத்துக்கிரங்கி, அஷ்டமூர்த்தங்களில் ஒன்றான பிரிதிவிஸ்வரூப சார்வ மூர்த்திக்கு ஸுகேசிரூபசக்தியாகவமைந்து சார்வபௌமனை அங்காரகனைப்பெற்ற ரூபத்தோடு தோன்றினைப்போலும், தூளிகமஞ்சத்தில் அறிதுயிலமர்ந்து யோகநித்ரை செய்திருந்த கோலம் நீங்கிக் கண்விழித்துக் கடாக்ஷ வீக்ஷணம் செய்து "தத்துவமசி" போதம் செய்யும் திருக்கோலத்தோடு சாந்த ஸ்வரூபியாய் வித்தியாலக்ஷ்மியாம் சரஸ்வதிக்குத் தாயான "பாரதீ மாதா" என்னும் இரகசியநாமரூபத்தோடு இந்த பாரதவர்ஷமான பரதக்கண்டமுழுவதையும் நினது திருவருள் நீழலில் தரித்துள்ளதுபோலும், என் அகத்தின்கண் தோன்றியவாறு புறத்தின்கண்ணும் அமைந்திருப்பதைக்கண்டு ஜய ஜய வென்று ஜயபேரிகை யடித்து உன் திருவடியைத் தொழுது உன் ஸ்வமஹிம்னையை இரகசிய நாமங்களால் வந்தித்துத்தொழுவேனாகவும்.

"நாராயணம் நமஸ்க்ருத்ய நரம்சைச்சவ நரோத்தமம் |
தேவீம் ஸரஸ்வதீம் வ்யாஸம் ததோஜயமுதீரயேத் ||"

"ஸுகேசி" ரூபமாய் விளங்கும் உன் திருவயிற்றினின்றும் அவதரித்துள்ள திவ்யபுத்திரனை சார்வ-பௌமன் இப்பரதக்கண்டத்தின் புகழொளி மழுங்காது காத்தருள்வானாக! ஞானபூமியாம் இப்பரதக் கண்டத்தில் உனது திருவருள் நீழல்பட்ட மாத்திரத்தில் அஞ்ஞான முதலான மும்மலமும், உட்பகையான அறுவிகாரங்களைப்போல், புறப்பகையான அறுபகைகளும் நீங்கியொழியட்டும்! நான் எப்போதும் "வந்தே மாதரம்" என்று உன்னைத்தொழுதிருப்பேன். தாயே! பாரதீ மாதா! நீயளித்த கல்விச்செல்வத்தை யுனக்கே யர்ப்பணம் செய்து உன் சேவடிக்கே யுழைக்க இதோ கங்கணங்கட்டிக் கொண்டேன்.

"அன்றே என்றன் ஆவியும்உடலும் உடைமையெல்லாமும்
குன்றேயனையாய்! என்னையாட்கொண்டபோதே கொண்டிலையோ?
இன்றோரிடையூறெனக்குண்டோ? எண்டோண்முக்கண் எம்மானே!
நன்றேசெய்வாய், பிழைசெய்வாய், நானோ இதற்கு நாயகமே!"

"சாக்ஷிநீயம்பிகே ஆக்ஷிகொளௌனுள்ளே,
பீக்ஷியிலாதென் றுமெனையுன்னோடைக்கியம் செய்தாய்!
ஆக்ஷியுனதம்பிகே யடியனுன்னற்றொழும்பன்
காக்ஷிகொடுத்தாண்டவென்னைக் காப்பதுன்றன் கடனே!"

என்றுபாடிய அப்பொழுதே வந்து அத்துவித உபதேசம் செய்த உன்னை இன்று நான் மறப்பேனோ?

"உன்னை மறக்கிலெந்தாயுயிரென்னுடம்பில் வாழுமோ
உன்பாலன்றிப்பிறர்பாலென் றனுள்ளஞ்சூழுமோ
என்னைக்கொடுக்க வாங்கிக்கொண்டதென்ன கருதியோ
எந்தாய் நின்னைக் கொடுக்க வென்பாலின்றுவருதியோ."

ஓம் ஸ்ரீம் ஹ்ரீம் நமோநம:

உ

ஸ்ரீம ஜகதாம்பிகை துணை.

# விவேகசிந்தாமணிக்கும்மி.

—:o:—

(" சீர்மேவும் தில்லையம்பலத்தில்" என்கிறமெட்டில் பாடலாம்).

1. சீர்பெற்ற சென்னை மாநகர் தன்னில்
வளம்பெற்ற (திரு)வல்லிக் கேணி யில்
அறிவைப்ப ரவச்செய் வதற் கானி
அம்பிகை சீர்பாதம் காப்பாமே.

2. அழகான ஆயிரத் தெண்ணூற்றுத் தொண்ணூற்
றிரண்டாவ தாண்டில் தான் ஜனித்து
கல்விகற் றோருக்கு ஞானம் புகட்ட
(விவேக)சிந்தாமணி யென்னும் நாமம் பூண்டு

3. பிறந்த கிரகம் (ஆனந்)தாஸ்ர'ம மாம்
வளர்த்து வருபவர் ஞானப் பிதா
ஆதரிப் பவரறி வுடையோ ரென்றுசொல்ல
ஆக்ஷேப ணையுண்டோ சொல்லுங்கடி.

4. பிறந்த துமுதல் சிந்தா மணியது
(பிர தி)மாதந் தோறு நம்மைச் சந்தோஷித்து
பாலர்க்கினிய உப தேசங்களைப்
பாங்குடன் சொன்னதைப் பார்த்தாயோடி.

5. புருஷன் ம னைவியை நடத்தும்வி தம் பர்த்தா
வுக்குமனைவி கீழ்ப்படியும் விதம்
மாமி கொடுமை மருகி துஷ் டத்தனம்
மறக்காமற் சொன்னதைப் பார்த்தாயோடி.

6. ஸோப்பு மஞ்சளுடை' ஸம்பா ஷணையும்
(இநாமல்')கற் சட்டி ஸம்பா ஷணையும்
இருவஸ்து வைப்பெண்க ளிகழ்ச்சியாப் பேசிய
இனிய தொருஸம் பாஷணையும்,—

7. ஸ்திரீக ளுடைய நடத்தை களும்
ஸ்திரீ ஸாஹஸ மும்நகைப் பைத்யங்களும்
புருஷன றியாமல் செய்கின்ற (போக்கிரி)த்
தனங்களைச்சொன்னதைப் படியுங்கடி.

8. பெண்களுக் குற்ற விஷயங் களும்
பெண்கல் விகளும் கதைக ளுமாய்
நாடக முதலான 'நாவல்' களையும்
நவின் று ரைத்ததைப் பாருங்கடி.

9. பார்க்க இரண்டு கண்க ளிருந்தும்
நடக்க இரண்டு கால்க ளிருந்தும்
பார்க்க நடக்க முடியாப் பட்டணங்களைப்
படித்தறிந்து தெரிந்து கொண்டோம்.

10. பாலவி வாகம்மு தலானப ழமொழிகளும்
பலவான வித்வத் விலாஸவி டுகதைகளும்
விசேஷக் குறிப்பும் விநோ தங் களும்
ஜாலவித் தைகள்முதலானவையும்,—

11. தேசசு காதாரம் கிராமசு காதாரம்
தேகசு காதாரம் முதலா னதை
திறமையுடன் நமக் குப தேசம் செய்ததை
அறிவுடன் படியடி ஸ்நேகப்பெண்ணே.

12. இராஜ ராஜாக் கள்ச ரித்திரமும்
அந்தந்த ராஜாங்க த்தந்தி ரமும்
இராஜா ஜாங்கத்தைப் பாராத வர்கட்கு
இரஸமாகச் சொன்னதைப் பாருங்கடி.

13. தேசத்தி லுள்ளம ஹான்கள்ச ரித்திரமும்
பரோப காரிமா தர் சரித்தி ரமும்
கல்விகற்ற மாதர் சமர்த்துக் களும்
கவிபாடி யமாதர் சாதுர்யங்களும்.

14. " விவேகசிந்தாமணிஏஜன்ஸியும் "
நாமம்ஸாமிநாதையர் என்பவரும்
பெண்கள்படிக்கவே பெருமுயற்சிகொண்டு
பாடுபட்டுழைப்பதைப்பாருங்கடி.

15. ஆதிமு தலிலே அய்யர் அவருக்கு
அநேகவி தக்கஷ்டம் வந்த துண்டு
அந்தசிர மங்களை அவரறி யாவண்ணம்
அவர்தர்மத் துணைவியால் தான்மறந்தார்.

16. இப்படி யாக பர்த்தா வுடன்கூட
பத்தினி யாரும் பத்துவ ருஷங்கள்
சிந்தாம ணிக்குப் பாடுபட் டுழைத்ததைப்
பாவிந மன்பா ர்த்து ஸஹிக்காமலே.

17. ஸ்ரீலோக நாயகி யாரும்காலம் செல்ல
நம தையர் பஹிர்முகம் அற்றிருக்க
அம்பிகை யருளால் அத்வைத ஞானத்தை
ஆராய்ந்து கைக்கொண்டார் பாருங்கடி.

18. அப்பொ ழுதுமுதல் அத்வைதம் ஸ்ரீதத் துவம்
ஆனந்தத் தாய்மொழி ஆத்ம ஞானம்
அஜ்ஞான பிரஜ்ஞான ப்ரஹ்ம ஞானங்கள்
ஆனந்த மாய்ச்சொன்னார் பாருங்கடி.

19. கீதை களும் உப நிஷத்துக்களும்
கீர்த்தி பெற்றமஹான்' லெக்சர் 'களும்

மாக்ஷி பெற்ற மஹா பாரதமும்
வளம்பெற்ற வால்மீகி ராமாயணம்,

20. காசி காண்டமும் ஸேது மஹிமையும்
கடல் காவேரி தீர்த்தத்தின் மஹத்துவமும்
தில்லைஸ்த லத்தின் மகிமைகளும்—அந்த
நடராஜ மூர்த்தியின் கீர்த்திகளும்,

21 கனக ஸபையின் காக்ஷி களும்
நடன சபையின் நேர்த்தி களும்
சிற்ச பையி னுடை' சீர்களும்
(சிதம்பர)ரஹஸ்ய பஞ்சாக்ஷர மகிமைகளும்,

22. வயிறு படுத்தும் துன்பங் களும்
அந்தப் பாழுக்கு நாம்படும் தொல்லைகளும்
பொய்யும் களவும் கொலைகளுஞ் செய்தந்தப்
பையை நிறப்பும் விதங்களையும்,

23. மாயாப் பிரஞ்ச நாடகங் களும்
(மாயைக்குள்)ஜீவன் படும் துன்பங் களும்
தசேந்திரி யங்க ளுடை' சண்டைகளும்
மத்யஸ்தம் துர்ப்புத்தி சொல்வதையும்,

24. சாந்த மென்கின்ற ஸத்புத் திரனுக்கு
ப்ரஹ்மா னந்தமென் கின்ற தாயானவள்
ஞானப் பாலைப்பு கட்டியு லகஜாலத்தைப்
*பாங்குடன் சொல்வதைப் பாருங்கடி!

25. மனோராஜ்யத் தால்தோன் றும் செய்கைக
[ளுமதை
மெய்யென்று ஆனந்தம் கொள்வதை யும்மனக்
குரங்கு பண்ணும் சேஷ்டையென் றெண்ணு
மட்டற்ற துக்கம டைவதையும்,— [மல்

26. ஞானரா மாயணக் கப்பல்களும் ஆத்மா
ராமன்பட்ட மஹா கஷ்டங் களும்
இராஜஸ ராவணன் ஆனந்த சீதையைத்
(துன்ப) இலங்கையில்காவல்வைத்ததையும்,—

27. ஸ்ரீலலி தாம்பாள் உற்பத்தி காரணமும்
(தேவி)பண்டா சுரனை வதைத் ததையும்
தேவர்கள் ஸங்கடந் தீர்த்த தையும்
ஸ்ரீகாமேசர் ஆனந்தம் கொண்டதையும்,—

28. ஸ்ரீவாங்கள் செய்த பூஜைகளும்
ஸ்ரீஆயன் கோபித் தொளிந் ததையும்
அவர்பக்திக் கிரங்கி அனந்தங் காடுதன்னில்
ஆனந்தர் தரிசனம் தந்ததையும்,—

29. ஸ்ரீபர மாத்மா திருப்பள்ளி யெழுச்சியும்
ஜீவாத்மா தானந்தர்-மூகமானதும்
அறிவாகி யானந்த மணியைத் தேடியவர்
பாதத்தி லர்ப்பணம் செய்ததையும்,—

30. பக்திசிரத் தையுடன் புண்டரீ கபக்தன்
பண்ணின மாதா பிதா பூ ஜையால்
அவன்பக்திக் குகந்துமேபாண்டுரங்கர்ஒற்றைக்
கல்லில் நின் றுகாக்ஷி தந்ததையும்,—

31. ருஷ்யா ஜப்பானிய யுத்தங்க ளுமவர்
சண்டை செய்யும் மாயா தந்திரமும்
ஜப்பா னுகிய மஞ்சட்கு ரங்கது
(ருஷ்ய)வெள்ளைக் கரடிமே லேறினதும்,—

32. பாலர்க் கினிய கீதங்க ளும்நல்ல
விளையாட்டுக் கும்மிகோ லாட்டங் களும்
தேகப்ப யிற்சிம னப்பயிற் சிநல்ல
குணப் பயுற்சியும் படியுங்கடி.

* "பாரதீ மாதா" அறிதுயில்நீங்கி, ஆனந்தத்தாயாம், துரியாம்பாள் மூர்த்தமாய், உலகெலாமுணர்ந்துய்ய, இப்பரதக்கண்டமாம் ஞானபூமியில் அவள் திருவருள் நீழல்பட்டுச்சோபிக்க, "திருப்பள்ளியெழுச்சி" கொண்டு, "தத்துவமசி" பாடம்சொல்லத்தயாராயிருக்கும்காட்சியைப் பரிசுத்த குழந்தைமனதுடைய பாலகிர்ஷ்ணரூபஆத்மாக்களும் அன்புவசப்பட்டாடும் கோபிகாரூபஜீவன்களும் கண்குளிரக்கண்டு அவள் திருவருட்பிரஸாதத்துக்குப்பாத்திரமாகும்படி, அவள்திருவருள் நீழல்பட்டு விளங்கும் இந்தியாவை "பாரதீமாதா" மயமாய்க்காட்டியிருக்கும் படத்தையெல்லவரும் பூஜித்துப் புனிதராகும் பொருட்டு விவேகசிந்தாமணிக் கமிட்டி யார் சித்திரவர்ணமையில் உயர்ந்த 'ஆர்ட் பேபரில்' அச்சிட்டு அதிகசொற்பவிலைக்குக் கொடுக்க எற்பாடுசெய்திருக்கிறார்கள். இதையொட்டிப்பின்னும் பூஜார்ஹயான படங்களை அம்பிகையின் திருவருளை முன்னிட்டுச் சமயோசிதமாக வெளியிடக் கருதியிருக்கிறார்கள். அமெரிக்காவிலிருந்து வந்த கிருஷ்ணபக்த கோபிகாவநிதைகளாம் பஞ்சகன்னிகளில் ஒருவர் "இந்தியா மங்களம்" என்று இங்கிலீஷில் மங்களம்பாடியிருப்பதையப்படியே மற்றொருபக்கத்தில் "ஆப்நோதி ஸ்வாராஜ்யம்" என்கிற சுருதிவசனப்பொருளோடு பிரசுரித்திருக்கிறோம். விவேகசிந்தாமணிக்கும்மி யின் 24-வது பாட்டின் உட்கருத்தும் இதுவே.

ஓம். ஸ்ரீம், ஹ்ரீம் நமோநம:

33. இப்படி யாக இன்னு மனேக
இனிய விஷய மெழுதி யவர்
செம்மை யுறவே சிந்தா மணிக்கு
மூவ்வைந் தாண்டுகள் நிறையும் போது,

34. கும்பினி யான்என்னும் கொள்ளைக்கா ரன்
கம்பேனி அர்பத்நட் என்று சொல்லி [வந்து
கோடி கோடியான தனங்களை யெல்லாம்
கொள்ளை கொண் டானேழை வயிரெறிய.

35. நூற்றுக்கு எட்டு † வட்டியென் றுசொல்வி
நோட்சும் செக்கையும் கைகொ டுத்து
மாயாவி வெள்ளை முகமுடை யான்செய்த
மர்மத்தைக் கேட்டால் மனதெரிவார்.

36. தாயில்லாப் பிள்ளை வயி றெரிய
தந்தையில் லாப்பிள்ளை துக்கப் பட
புருஷனி றந்தவர் புலம்புவ தைக்கேட்டு
பொறுமையு டன்பார்த்து ஆனந்தித்தான்.

37. மைனர்க ளெல்லாம் வயி றெரிய
(நம்)மண்டலத் தோர்கள் மன தெரிய
வட்டியைக் கொண்டு வயிறுவ ளர்த்தவர்
வகைதெரி யாமல்த வித்தழுதார்.

38. வியாபாரம் வர்த்தகம் செய்யவந் தான்பாவி
வையக மெல்லாம் கையிற் கொண்டான்
இந்துக் களான இளிச்ச வாயனை
எய்த்துவிட் டான்மாய தந்திரத்தால்.

39. இந்துதேச சொத்தைக் கொள்ளை கொண்டான்
(இனி)திரும்பாத நோய்களைக் கொண்டுவிட் [டான்
சுபிக்ஷ்மான இந்த-தேசத்தைப் பஞ்சத்தால்
பறக்கவிட்டான் ஜனம் தவிக்கவிட்டான்.

40. இத்தனை நம்பிக்கை மோசக் காரனிடம்
நமதையர் பணத்தையும் போட்டு வந்தார்
தர்மப் பணம் சிலது களும்தம்
குழந்தைகள் பணமும் கொள்ளைவிட்டார்.

41. சிந்தா மணியின் முதலிழந் துஅவர்
திரவிய மெல்லாம் தானிழந் தும்
(மனது) தீரத்தைக்கைவிடாமல்அவர்
மட்டற்ற ஆனந்தங் கொண்டதையும்,

42. விவேக சிந்தாமணி விஷயத் தையும்
நமதையர் ஞானவை ராக்கியத் தையும்
அம்பாளுடைய அருளைப் பெற்றா லன்றி
அறிந்து எழுத முடியாது.

43. ஆனந்தத் தாய்மொழி அளவில்லா மற்பெற்ற
ஆத்ம ஞானியின் சரித்திரத்தை
ஆராலே யுஞ்சொல்ல முடியாது
ஆதிசேஷன்சொன்னால் நாக்கற்றுப்போம்.

† "வலுவில் வந்தா லஞ்சுவட்டி,
வேண்டி யிருந்தால் எட்டு வட்டி"

44. சிந்தா மணியின் ஸாராம்சத் தைக்ரகிக்க
ஸ்தூலப்புடிப்பால் தெரியாது
ஸ்ரீகுரு தேவியின் அனுக்ரகத் தால்ஞான
ஸூக்ஷ்மமெல் லாம்ஸ்தூல மாய்விளங்கும்.

45. எட்டு மிரண்டு மறியாப் பேதைநான்
ஏதோ கெக்கும்மிப் பாட்டுக்ரைத் தேன்
எத்தனை சொற்பிழை யிருந்திட்ட போதிலும்
ஏழைப்பெண் குற்றம் பொறுக்கவேணும்.

46. வாருங்கள் சேருங்கள் சந்தாதா ர்ங்களே
ஒருஸங்கதி சொல்கிறேன் கேளுங் களேன்
சிந்தாமணி யென்றும் சிந்தாமல் வாழவே
(புது)சந்தாதா ரர்களைச் சேருங்களேன்.

47. சந்திர சூரியர் ஸப்தஸா காங்கள்
ஸமஸ்த வேதங்கள் உள்ள மட்டும்
இந்திய தேசங்கள உள்ளமட் டும்நாம்
சிந்தாமணியை நழுவ விடோம்.

48. ஆனந் தானும ஏஜன் ஸிக்கு
அனேக தனங் களுண் டாகவேணும்
விவேகசிந்தா மணிகர்த் தருக்கு
வேண்டிய தனமுண் டாகவேணும்.

49. ஆலது போல்தழைத் துச்சிந்தாமணி
அருகது போல் எங்கும் வேரோடி
மூங்கி லதுபோல் வியாபித் தெங்கிலும்
முடியா திருந்து வாழவேணும்.

50. ஒருகல் பத்துக் கழியா இந்த
உத்தம சிந்தா மணிக் கும்மியை
பக்தி யுடனே படித்தோரும் கேட்டோரும்
பாக்ய வதிகளாய் வாழ்ந்திடுவார்.

51. புத்திர சம்பத் தைப் பெற்றிடு வார்தன்
புண்ணிய பர்த்தா வுடன் வாழ்வார்
இம்மை மறுமையில் போகபாக் கியத்துடன்.
இந்திர னைப்போல் சுகித்திருப்பார்.

(வாழ்த்து.)

வாழ்கவே விவேக சிந்தா மணியது
வளம்பெற்று சீர்பெற்று வாழ் கவே
தாழ்வேது மில்லாமல் நமதேஜன் ஸிஜயரும்
நலம்பெற்று க்ஷேமமாய் வாழ்கவே.

(மங்களம்.)

மங்களம் ஜக தாம்பி கைக்கும்
மங்களம் விவேக சிந்தா மணிக்கும்
மங்கள மேஜன்ஸிஸாமிநா தையர்க்கும்
மங்களம் சந்தா தாரர்களுக்கும்.

ஓம். சுபம்.

உலகசகோதரி.

PRINTED BY VEST AND CO., STEAM PRINTERS, MADRAS.